[*Note*.—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

## II.—GOVERNMENT BUSINESS.

### DISCUSSION ON THE BUDGET FOR THE YEAR 1958–59—*cont.*

2-10 p.m. MR. CHAIRMAN : Now the discussion on the Budget will be continued. Mr. A. J. Arunachalam will now speak.

SRI A. J. ARUNACHALAM : கனம் சபாநாயகர் அவர்களே, கனம் நிதி அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்த வரவு செலவுத் திட்டத்தின் பேரில் கடந்த ஐந்து தினங்களாக சபையில் விவாதம் நடந்து வருகிறது. அந்த விவாதத்தின்போது சில கனம் அங்கத்தினர்கள் கைத்தறித் தொழிலைப்பற்றிப் பேசினார்கள். அவர்களுக்கு நான் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். நெசவுத் தொழிலைப்பற்றி சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். கைத்தறி நெசவுத் தொழிலின் வரலாற்றைப் பற்றிச் சுருக்கமாகச் சொல்லிவிட்டு, கைத்தறித் துணிகளுக்கு அளித்து வந்த ரிபேட்டை மத்திய அரசாங்கத்தார் 1½ அணாவிலிருந்து 1 அணாவாகக் குறைத்ததன் விளைவாக கைத்தறி ஜவுளிகள் விற்பனையாகாமல் தேங்கியிருப்பதைப்பற்றியும், அதனால் கைத்தறி நெசவாளர்கள் எவ்வளவு பாதிக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதைப்பற்றியும் விரிவாகப் பேச விரும்புகிறேன்.

நெசவுத் தொழில் நம் நாட்டில் பழமையான தொழில். நம் நாட்டில், இந்தத் தொழில் இப்போது நெசவு மில்களுடன் போட்டியிடக்கூடிய சக்தியுடையதாக இல்லை என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். சுமார் நூறு அல்லது இருநூறு ஆண்டுகளாகத்தான் இயந்திர மில்களின் மூலம் துணிகள் உற்பத்தியாகி வருகின்றன. அதற்கு முன்பு, பல்லாயிரம் ஆண்டுகளாக மக்களுக்குத் தேவைப்படும் துணிகள் கைத்தறியினால்தான் நெய்யப்பட்டு வந்தன என்பது வெட்ட வெளிச்சமாகத் தெரிந்த விஷயம். நெசவாளி மனிதனின் மானத்தைக் காப்பாற்றும் பொறுப்பை ஏற்றுக் கொண்டு, மனிதனுக்கு வேண்டிய ஆடையைத் தயாரித்துக் கொடுத்து வந்தான். மக்கள் மானத்தைக் காப்பாற்றும் நெசவாளியை ஆதரிப்பதற்கு நான் கடமைப்பட்டிருக்கிறேன். நீண்ட காலத்திற்கு முன்பே இந்தத் தேசத்தில் கைத்தறி நெசவாளர்களால் மெல்லிய ஆடைகள் நெய்யப்பட்டு வெளி நாடுகளுக்கு விருப்பத்துடன் அனுப்பப்பட்டு வந்தன. பண்டைக் காலத்திலேயே கைத்தறித் துணிகளை வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்துவந்த நம் நாட்டில் இன்று கைத்தறித் தொழில் க்ஷீணித்த நிலையில் காட்சியளிக்கிறது.

நம் மாநிலத்தில் இந்தத் தொழிலை நம்பி சற்றேறக்குறைய 30 லட்சம் மக்கள் இருக்கிறார்கள். நம் மாநிலத்தில் 5 லட்சத்திற்கு மேற்பட்ட கைத்தறிகள் இருக்கின்றன. இந்திய யூனியனில் சுமார் 28 லட்சம் கைத்தறிகள் இருக்கின்றன. நம் யூனியனில் இந்தத் தறிகளை நம்பி சுமார் 1½ கோடி மக்கள் வாழ்கிறார்கள். நம் சென்னை மாநிலத்தில், 12 பேர்களுள் ஒருவன் நெசவாளியாக இருக்கிறான். நம் மாநிலத்திலுள்ள 3 கோடியே 20 லட்சம் மக்களுள், 30 லட்சம் பேர் நெசவாளிகளாக இருக்கிறார்கள். தங்களுக்கு ஆடைகளை நெய்து கொடுக்கும் நெசவாளிகள் வயிறார உண்ணுவதற்கு வேண்டிய கூலியைப் பெறுகிறார்களா என்று மற்றவர்கள் கவனிக்கிறார்களா ? நமக்கு அத்தியாவசியமான ஆடைகளைத் தயாரித்துக் கொடுக்கும் கைத்தறி நெசவாளி வாழ வேண்டுமா, வாழ வேண்டாமா என்ற பிரச்னை இப்போது எழுந்திருக்கிறது. கைத்தறி நெசவுத் தொழிலுக்குப் போட்டியாக இருக்கும் இயந்திர மில் தொழில் உச்ச நிலையை அடைந்திருக்கிறது. இந்தப் பிரச்னையைத் தீர்ப்பதற்காக கனுங்கோ கமிட்டியை மத்திய அரசாங்கத்தார் மூன்று ஆண்டுகளுக்கு முன்பு நியமித்தார்கள். அந்தக் கமிட்டியினர் நாடு பூராவும் சென்று நிலைமையைக் கவனித்த பிறகு ஒரு ரிப்போர்ட்டைக் கொடுத்தார்கள். அவர்கள் தங்கள் ரிப்போர்ட்டில், மில்கள் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தின் கடைசி ஆண்டான 1960-ம் ஆண்டில்தான் அவைகளுக்குரிய உயர்ந்தபட்ச

7th March 1958] [Sri A. J. Arunachalam]

அளவான 500 கோடி கெஜம் துணிகளை உற்பத்தி செய்யலாம் என்றும், எற்று மதிக்காக அவைகள் 100 கோடி கெஜம் உற்பத்தி செய்யலாம் என்றும், கைத்தறிகள் 260 கோடி கெஜம் துணிகளை உற்பத்தி செய்வதற்கு அவ காசம் கொடுக்கலாம் என்றும் தெரிவித்தார்கள். ஐந்நூறு கோடி கெஜம் துணிகளை 1960-ம் ஆண்டில்தான் மில்கள் உற்பத்தி செய்ய வேண்டு மென்று கனுங்கோ கமிட்டியினர் தெரிவித்திருந்தார்கள். அதற்கு இன்னும் இரண்டு ஆண்டுகள் இருக்கின்றன. ஆனால் 1956-ம் ஆண்டி லேயே மில்கள் 530 கோடி கெஜம் துணிகளை உற்பத்தி செய்துவிட்டன. 1957-ம் ஆண்டில் 540 கோடி கெஜம் துணிகளை மில்கள் உற்பத்தி செய்தன. 1960-ம் ஆண்டுக்கு நிர்ணயிக்கப்பட்டிருக்கும் உச்ச வரம்பிற்கும் மேலாக 70 கோடி கெஜத்தை இந்த இரண்டு ஆண்டுகளில் மில்கள் உற்பத்தி செய்துவிட்டன. 1960 வரை இருக்கும் மூன்று ஆண்டுகளில் மில்கள் மொத்தம் 100 கோடி கெஜம் துணிகளை அதிகமாக உற்பத்தி செய்து விடுமோ என்று அஞ்சுகிறேன்.

சென்னை ராஜ்யத்தைப் பொறுத்த வரையில், கனம் அமைச்சர் ஸ்ரீ வெங்கடராமன் கைத்தறிப் பிரச்னையைத் திறமையாகக் கவனித்து வரு கிறார். கைத்தறி நெசவாளர்களின் நிலைமையை அவர் நன்றாகத்தெரிந்து கொண்டு, எங்களுக்குப் பக்க பலமாக இருந்து வருகிறார். கைத்தறி நெச வாளர்களுக்கு உதவுவதற்காகக் கைத்தறி செஸ் நிதியை மத்திய அரசாங் கத்தார் திரட்ட ஆரம்பித்தார்கள் என்பது கனம் அங்கத்தினர்கள் எல் லோருக்கும் தெரிந்திருக்கும். அவர்கள் 6 கோடி ரூபாய் செஸ் நிதி திரட்டி சென்னை மாநிலத்திற்குக் கிட்டத்தட்ட $1\frac{1}{4}$ கோடி ரூபாய் கொடுத் தார்கள். ஆனால் சென்ற டிசம்பரிலிருந்து, அவர்கள் கைத்தறித் துணி களுக்கு 1 அணாதான் ரிபேட் கொடுத்து வருகிறார்கள். சென்ற டிசம்பரில் ரிபேட்டை $1\frac{1}{2}$ அணாவிலிருந்து 1 அணாவுக்குக் குறைத்தார்கள். கைத்தறி நெசவுத் தொழில் மிக நெருக்கடியான நிலைமையில் இருக்கும்போது மத்திய அரசாங்கத்தார் ரிபேட்டைக் குறைத்துவிட்டார்கள்.

சென்னை மாநிலக் கைத்தறி நெசவாளர் சங்கம் இந்திய யூனியனிலேயே ஒரு பெரிய கைத்தறி ஸ்தாபனமாக இருக்கிறது. அத்துடன் 929 கைத்தறி நெசவாளர் சங்கங்கள் இணைக்கப்பட்டிருக்கின்றன. அவைகள் எல்லாவற்றி லுமாக மொத்தம் 190,000 கைத்தறிகள் இருக்கின்றன. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் ஆரம்பமாவதற்கு முன்பு இங்கே 1 லட்சம் கைத்தறி கள் இருந்தன. இப்போது இங்கே 190,000 கைத்தறிகள் இருக்கின்றன. சென்னை ராஜ்யத்தில் மொத்தத்தில் 2 கோடி ரூபாய் பெறுமான கைத்தறித் துணிகள் தேங்கிக் கிடக்கின்றன. இவ்வளவு துணிகள் தேங்கி யிருக்கும்போது, மத்திய அரசாங்கத்தார் ரிபேட்டைக் குறைத்தார்கள். இது சரிதானா? 1960-ம் ஆண்டில்தான் மில்கள் 500 கோடி கெஜம் துணி உற்பத்தி செய்ய வேண்டுமென்று நிர்ணயித்திருக்கும்போது, 1956-ம் ஆண்டிலேயே 530 கோடி கெஜம் துணியை மில்கள் உற்பத்தி செய்து விட்டன. 1957-ம் ஆண்டிலும் அவைகள் அதிகமாக உற்பத்தி செய்துவிட்டன. அவைகள் அதிகமாக உற்பத்தி செய்ததால், மில் துணி களும் கொஞ்சம் தேக்கமடைந்தன. இந்த நேரத்தில், தேக்கமடைந்த மில் துணிகள் விற்பனையாக வழி செய்ய வேண்டுமென்ற எண்ணத்துடன், மில் துணிகளுக்கு விதித்து வந்த விற்பனை வரியை சமீபத்தில் மத்திய அரசாங்கத்தார் எடுத்துவிட்டார்கள். அதுபோக, மில் துணி மீது விதிக்கப் பட்டிருந்த கலால் வரியை சராசரி 3 நயா பைசா குறைத்தார்கள். அதனால் ஒரு கெஜம் மில் துணி விலை ரூ. 0–2–0, ரூ. 0–2–6 குறையும் சந்தர்ப்பத்தை ஏற்படுத்தினார்கள். அதே நேரத்திலே கைத்தறித் துணிக்கு இருந்த ரிபேட்டை $1\frac{1}{2}$ அணாவிலிருந்து 1 அணாவுக்குக் குறைத்தார்கள். அதனால் நெசவுத் தொழில், நெசவுத் தொழிலாளர்களுடைய நிலை எவ்வாறு பாதிக்கப்பட்டிருக்கிறது என்பதைச் சற்று சிந்தித்துப் பார்க்க 2-20 p.m.
வேண்டுமென்பதற்காகத்தான் இந்தப் புள்ளி விவரங்களை உங்களுக்கு நான் கொடுக்கக் கடமைப்பட்டிருக்கிறேன். இந்த நெருக்கடியான அவல நிலையிலே ஏராளமான துணி தேங்கியிருக்கும்போது, ரிபேட்டைக் குறைத் தது சரியல்ல, அதை உடனடியாக உயர்த்த வேண்டும் என்று கனம்

தொழில் அமைச்சர் அவர்களும் மந்திரி சபையும் மத்திய அரசாங்கத் திற்குச் சிபார்சு செய்திருக்கிறார்கள். அந்தச் சிபார்சினால் கைத்தறித் தொழிலாளர்களுக்கு நடைமுறையிலே நிவாரணம் கிடைக்க வேண்டும்.

இந்த சபையிலும் சரி, கீழ் சபையிலும் சரி, கைத்தறி நெசவுத் தொழிலாளர் என்றால், இது ஒரு பொதுவான விஷயம் என்று எல்லா அரசியல் கட்சிக்காரர்களும் ஆதரிக்கிறார்கள். யாருக்கும் இதில் எதிர்ப்புக் கிடையாது, விரோதம் கிடையாது. அரசியல் கட்சிகளுக்குள்ளே எவ்வளவோ அபிப்பிராய பேதங்கள் இருந்த போதிலும், கைத்தறி நெசவுத் தொழில் நம் நாட்டு புராதனமான தொழில், அது நசித்துப் போகாமல் அதைக் காப்பாற்ற வேண்டுமென்ற பொறுப்பு ஒவ்வொருவருக்கும் இருப்ப தாக எல்லோரும் ஏக மனதாக நினைக்கிறார்கள். அந்த ஒரு விஷயம் தான், ஒரு தொழில்தான் எல்லோருடைய கவனத்தையும் ஒருங்கே கவர்ந்திருக்கிறது. எல்லோருடைய அபிப்பிராயத்தையும் ஒன்று திரட்டி சென்னையில் இருக்கும் இந்த அவல நிலையை மத்திய அரசாங்கத்தினுடைய கவனத்திற்கும், சம்பந்தப்பட்ட டிபார்ட்மெண்டு அல்லது போர்டினுடைய கவனத்திற்கும் கொண்டுவர வேண்டும்.

இந்த ராஜ்யத்தில்தான் நெசவாளர்கள் அதிகமாக இருக்கிறார்கள். ஆடையை அதிகமாக உற்பத்தி செய்வது இந்த ராஜ்யத்தில்தான். யூனிய னிலுள்ள 28 லட்சம் தறிகளில் 5 லட்சம் தறிகள் இந்த ராஜ்யத்தில் இருக்கின்றன. இந்த ராஜ்யத்தில் துணி உற்பத்தி அதிகமாக இருப்பதால், அதை விற்பனை செய்ய வேண்டுமென்ற நிலை ஏற்படுகிறது. விற்பனை மார்கெட் உண்டாக்க வேண்டுமென்ற கவலை இந்த ராஜ்யத்திற்கும், ஆந்திர ராஜ்யத்திற்கும்தான். மற்ற ராஜ்யங்களில் உற்பத்தி குறைவு, மார்கெட் ஏராளமாக இருக்கிறது. தொழிலமைச்சர் கொடுத்த ஒரு உதா ரணத்தை இங்கு மீண்டும் குறிப்பிடுகிறேன். வெள்ளம் ஓடிக்கொண் டிருந்தபொழுது ஒரு என்ஜீனியர் ஆழத்தை அளந்து பார்த்தார். ஒரு இடத்தில் 4 அடி, மற்றொரு இடத்தில் 6 அடி, மற்றொரு இடத்தில் 10 அடி இப்படி இருந்தது. கணக்கு எடுத்து விட்டு சராசரி ஆழம் $4\frac{1}{2}$ அடி தான், போகலாம் என்று சொன்னாராம். அந்தக் கணக்கை வைத்துக் கொண்டு ஆற்றைக் கடக்க முயற்சி செய்தால் 8 அடி, 10 அடி ஆழம் வரும்பொழுது மனிதனுடைய கதி என்ன ஆகும் ?

SRI A. M. ALLAPICHAI : அங்கே நீந்த வேண்டும்.

SRI V. V. RAMASWAMI : நம் நாட்டு என்ஜினியர் இல்லையே.

SRI A. J. ARUNACHALAM : நான் உதாரணத்திற்காகச் சொன்னேன். யாரையும் குறிப்பிட்டுச் சொல்லவில்லை. ஆந்திரா, சென்னை, மைசூர் ஆகிய மூன்று ராஜ்யங்களில்தான் நெசவாளர்களுக்குக் கஷ்டம் இருக்கிறது. மற்ற ராஜ்யங்களிலிருந்து புகார் வரவில்லை, கஷ்டம் இருப்பதாகத் தெரியவில்லை, மற்ற ராஜ்யங்களில் உற்பத்தி குறைவாதலால், விற்பனையாகவில்லை என்ற கஷ்டமில்லை, மெஜாரிடி ராஜ்யங்களில் நிலைமை திருப்திகரமாக இருக்கிறது, மூன்று ராஜ்யங்களில்தான் கஷ்டம்—ஆகை யால் ரிபேட்டைக் குறைத்தால் ஒன்றும் கவலையில்லை என்ற போக்கிலே செய்திருக்கிறார்கள். தொழிலமைச்சர் கொடுத்த உதாரணம் ரொம்பப் பொறுத்தமானது. நம்முடைய சர்க்கார் நெசவாளர்களுடைய கஷ்டங்களைக் கவனித்து பல விதங்களில் உதவி அளித்திருக்கிறார்கள். நெசவாளர் களின் கஷ்டங்கள் அரசாங்கத்திற்குத் தெரியும். அவர்கள் செய்த உத விக்கு நெசவாளர்கள் என்றும் கடமைப்பட்டிருக்கிறார்கள். என்றாலும் கூட அவ்வப்பொழுது அவர்களுக்கு ஏற்படும் குறைகளைச் சொல்லிக் கொள்ளாமல் இருக்க முடியாது. சொல்லித்தான் பரிகாரம் தேட வேண்டும், கிளர்ச்சி செய்து தான் பரிகாரம் தேட வேண்டும்.

நம்முடைய ராஜ்யத்தில் விசைத்தறியைப் புகுத்துவதற்குப் பெரு முயற்சி நடந்தது. கனுங்கோ கமிட்டி விசைத்தறியைப் புகுத்த வேண்டு மென்று சிபார்சு செய்தது. கைத்தறிக்கு மேலும் ஊக்கம், ஆக்கம்,

7th March 1958] [Sri A. J. Arunachalam]

உற்சாகம் தரவேண்டுமென்பதைக் கமிட்டியார் மறந்து, கைத்தறி மூல மாகத் துணியை அதிகமாக உற்பத்தி செய்ய முடியாது என்ற எண்ணத் தில் விசைத்தறியைப் புகுத்துவதற்குத் திட்டம் போட்டுக் கொடுத்தார்கள். கைத்தறி இதனால் பாதிக்கப்படும் என்ற காரணத்தினாலே, விசைத்தறி கூடாது என்று நாங்கள் கிளர்ச்சி செய்தோம். கூட்டங்களைப் போட்டுக் கேட்டுக் கொண்டோம், அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டோம். என்னைப் பொறுத்த வரையிலே, நெசவாளர் சமுதாயத்தைப் பொறுத்த வரையிலே, எங்கள் குறையைச் சொல்லி, நிவர்த்தி செய்ய வேண்டுமென்று கேட்டுத் தான் கொள்ளுவோம். கண்டிப்புக் கிடையாது. கண்டித்தால் காரியம் ஆகாது என்று எங்களுக்கு நன்ருகத் தெரியும். எங்களுடைய குறை நிவர்த்திக்கப்பட வேண்டுமானால் அரசாங்கத்தோடு ஒத்துழைத்து எங்க ளுடைய குறைகளை எடுத்துச் சொல்லி, எங்களுடைய கோரிக்கை நியாய மானது என்று அவர்களை உணரச் செய்தால்தான், அதன் மூலமாக எங்கள் காரியங்களை சாதிக்க முடியும். அந்த வகையிலும் சென்னை சர்க்கார் இரண்டு ஆண்டுகளுக்கு முன்பாக எங்களுடைய போராட்டம் வெற்றி பெறப் பெரும் உதவி செய்தார்கள். இந்த ராஜ்யத்தில் விசைத் தறியைப் புகுத்தக் கூடாது, நெசவாளர் தொழில் நசித்துப் போய்விடும். ஆகையினால் சென்னை ராஜ்யத்தில் விசைத்தறியைப் புகுத்துவதை ஒப்புக் கொள்ளுவதற்கு இல்லை என்று எங்களுடன் பரிபூரணமாக ஒப்புக்கொண்டு அதற்கு ஆதரவு கொடுத்தார்கள். அதையும் நாங்கள் மறப்பதற்கில்லை. அதற்காக சென்னை அரசாங்கத்திற்கு நாங்கள் பெரிதும் கடமைப்பட்டிருக் கிறோம்.

அதே நேரத்திலே இன்னொரு அறிக்கை சமீபத்திலே வந்திருக்கிறது. நான்கு விசைத் தறிகள் வைத்து நடத்துகிறவர்களுக்கு சமீபத்திலே விதிக்கப்பட்டிருந்த கலால் வரி பூராவையும் தள்ளிவிட்டார்கள். இது எங்களை எவ்வளவு தூரம் பாதிக்கும் என்பதைப்பற்றி நாங்கள் ரொம்பவும் பயந்து நடக்க வேண்டியிருக்கிறது. சென்ற வார அறிக்கையில் இம்மாதிரி குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதனால் குடிசைத் தொழில் என்று சொல்லக் கூடிய கைத்தறித் தொழிலுக்கு பேரும் தொந்தரவு ஏற்படும். இதனால் கைத்தறித் துணி விசைத்தறித் துணியோடு போட்டி போட்டாக வேண்டும். விசைத்தறியில் உற்பத்தி செய்து 100 கோடி கெஜம் மேல்நாட்டிற்கு ஏற்று மதி செய்ய வேண்டுமென்று சொன்னார்கள். நூறு கோடி கெஜம் இந்த நாட்டிலிருந்து ஏற்றுமதி செய்ய முடியவில்லை. மூன்று ஆண்டு களிலே 75 கோடி கெஜம் ஏற்றுமதி செய்யப்பட்டிருக்கிறது. கடைசியாக, கடந்த வருஷம் உயர்ந்த பட்சமாக 80 கோடி கெஜம் ஏற்றுமதி செய்யப் பட்டிருக்கிறது. ஆகையால், 20 கோடி கெஜம் அதிலே தேங்கியிருக்கிறது. விசைத்தறித் துணி அதிகமாக உற்பத்தி செய்யப்பட்டு ஏற்றுமதி செய்யப் படாமல் தேங்கிவிட்டால், அது உள்நாட்டில் கைத்தறித் துணியோடு போட்டி போட்டுத்தான் ஆக வேண்டும். அது நெசவாளர்களைத்தான் பாதிக்குமே தவிர, வேறு யாரையும் பாதிக்காது. ஆகையால், தொழில் அமைச்சர் அவர்களை நான் கேட்டுக்கொள்ளுகிறேன். விசைத்தறி கூடாது என்று போராடி நமது அரசாங்கம் வெற்றி பெற்றது. விசைத்தறித் துணி மீதுள்ள கலால் வரியை நீக்கியதைப்பற்றிக்கூட நான் குறைப்படவில்லை. விசைத்தறித் துணி ஏற்றுமதி செய்வதற்கு எவ்வளவு திட்டமிட்டிருக் கிருர்களோ அதை நிறைவேற்ற வேண்டும். ஐந்நூறு கோடி கெஜத் திற்கு மேல் துணி தயார் செய்யக்கூடாது என்று திட்டமிருந்தும் இரண்டு, மூன்று ஆண்டுகளில் அதிகமாகத் தயாரித்திருக்கிருர்கள். விசைத்தறித் துணி உற்பத்தி 500 கெஜத்திற்கு மேல் உயர்ந்துவிட்டது. எவ்வளவு நிர்ணயம் செய்யப்பட்டதோ அதற்குமேல் உற்பத்தி செய்யக் கூடாது என்று வரையறுத்து நம்முடைய அரசாங்கம் அதற்காகப் போராடி வெற்றி பெற வேண்டும். அதற்கு வேண்டிய முயற்சிகளை சென்னை அர சாங்கம் செய்ய வேண்டுமென்று மிகத் தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளு கிறேன்.

கைத்தறித் துணி ஏற்றுமதிக்கு பல வெளிநாட்டு மார்க்கெட்டுகள் இருந்தன. நம் நாட்டுத் துணிகளை வாங்கினால், இங்கே தங்கள் பணம் வந்துவிடுகிறது என்று எண்ணி அந்த நாட்டு மக்கள் அவர்களுக்கு

[Sri A. J. Arunachalam] [7th March 1958

வேண்டிய துணிகளை அவர்களே உற்பத்தி செய்துகொள்ள ஆரம்பித்திருக்கின்றனர். ஆகவே, ஏற்றுமதியைப் பெரிதும் நம்பக் கூடாது. மேலும், ரிபேட்டை எந்தக் காரணத்தைக் கொண்டும் குறைக்கக் கூடாது என்று மத்திய அரசாங்கத்தாரிடம் நம் அரசாங்கத்தார் கூறினார்கள். இந்தப் பிரச்னையைத் தீர்ப்பதில் பார்லிமெண்டு அங்கத்தினர்களும்
2-30 p.m. அக்கறை எடுத்துக்கொள்ள வேண்டும். நமது ராஜ்யத்தில் 40-க்கு மேற்பட்ட பார்லிமெண்டு அங்கத்தினர்கள் இருக்கிறார்கள். நான் கைத்தறியாளர் கஷ்டங்களை இந்த சபையில் விவரமாகச் சொல்வது போல், அவர்களும் அவைகளைப் பார்லிமெண்டில் அடிக்கடி சொல்ல வேண்டும். மேலும் அவர்கள் மத்திய சர்க்கார் மந்திரிகளைத் தினமும் காலையிலும் மாலையிலும் சந்தித்துப் பிரச்னையை எடுத்துக்கூற வேண்டும். கைத்தறித் துணிகள் ஏராளமாகத் தேங்கி யிருக்கும்போது, ரிபேட் தொகையைக் குறைத்தது சரியல்ல வென்றும் ரிபேட் குறைப்பை உடனடியாக ரத்து செய்ய வேண்டும் என்றும் அவர்கள் அடிக்கடி மத்திய அரசாங்க அமைச்சர்களிடமும் அதிகாரிகளிடமும் கூற வேண்டும்.

அரசாங்கத்தார் கொடுக்கும் கைத்தறி ரிபேட்டினால் ஐந்து லட்சம் கைத்தறி நெசவுத் தொழிலாளர்கள் பயனடைய வேண்டுமென்பது அரசாங்கத்தாரின் நோக்கம். கூட்டுறவுச் சங்கங்களில் சேராத நெசவாளர்கள் ரிபேட்டினால் பயனடைவதில்லை. எவ்வளவோ கைத்தறி நெசவாளர்கள் கூட்டுறவு சங்கங்களில் சேராமல் இருக்கிறார்கள். ரிபேட் கொடுக்கும்போது அரசாங்கத்தார் நெசவாளர்களிடையே பாகுபாடு செய்கிறார்கள். கூட்டுறவுச் சங்கங்களில் சேராத நெசவாளர்களும் பயனடையும் முறையில் அவர்கள் ரிபேட் கொடுப்பதில்லை. மானேஜ்மெண்ட் பள்ளி ஆசிரியர்களுக்கும் சர்க்கார் பள்ளி ஆசிரியர்களுக்கும் இடையே சர்க்கார் வித்தியாசம் பாராட்டுவதை நேற்றைய தினம் கனம் அங்கத்தினர் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி வெகு அழகாக எடுத்துக் கூறினார். நீண்ட காலமாக தொழிலாளர்களோடு தொடர்பு கொண்டு தொழிலாளர்களின் நலனுக்காகவே தம் வாழ் நாளெல்லாம் பாடுபட்டு வரும் கனம் ஸ்ரீ வெங்கடராமன் தம் பதவிக் காலத்திலேயே, கூட்டுறவுச் சங்கங்களில் சேராத கைத்தறித் தொழிலாளர்களும் ரிபேட்டினால் பயனடையுமாறு செய்ய வேண்டும் என்று அவரைக் கேட்டுக் கொள்ளுகிறேன். கூட்டுறவுச் சங்கத்தில் சேர்ந்துள்ள ஒரு கைத்தறி நெசவாளருக்கு 1 ரூபாய் உதவியளித்தால் கூட்டுறவுச் சங்கத்தில் சேராத நெசவாளருக்கு $\frac{1}{2}$ ரூபாயாவது உதவியளிக்க வேண்டும். ஐந்து லட்சம் தொழிலாளர்களுக்காகக் கொடுக்கப்பட்ட தொகையின் பயனை இரண்டு லட்சம் தொழிலாளர்கள் மட்டுமே அனுபவிப்பது சரியா ?

THE HON. SRI R. VENKATARAMAN : மத்திய அரசாங்கத்தார் கனம் அங்கத்தினர் குறிப்பிடுவதுபோல் நடக்க மறுக்கிறார்கள்.

SRI A. J. ARUNACHALAM : கனம் மந்திரி விடாமல் முயற்சி செய்ய வேண்டும். ஒன்று செய்யலாம். வெளியிலுள்ள நெசவாளர்களையும் கூட்டுறவுச் சங்கங்களில் சேர்ப்பதற்கு நடவடிக்கை எடுக்க வேண்டும். அதற்கு சட்ட ரீதியான நடவடிக்கையை எடுக்கலாம். அதற்கான உத்தரவை சர்க்கார் போடலாம். ஆனால், அவர்களைக் கூட்டுறவுச் சங்கங்களில் சேர்க்க முடியாது என்பதை நான் அறிவேன். இருந்தாலும், கனம் அமைச்சர் அதற்கு முயற்சி செய்ய வேண்டுமென்று அவரைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

மில்களை எடுத்துக்கொண்டால், ஷோலாப்பூர், அஹமதாபாத் போன்ற இடங்களிலுள்ள மில்களில் நூல்களை மட்டும் உற்பத்தி செய்கிறார்கள். சில மில்களில் நூல்களையும் துணிகளையும் உற்பத்தி செய்கிறார்கள். நூல்களையும் துணிகளையும் உற்பத்தி செய்யும் மில்கள் முதல் தரப் பஞ்சை எடுத்துக்கொள்கின்றன. அதனால் அவைகள் மிகவும் அனுகூலமடைகின்றன. அந்த மில்காரர்கள் மிகவும் லாபமடைகிறார்கள். வெளியேயுள்ள நெசவாளர்கள் அடைவதைவிட 10 சத விகிதம் அதிக லாபத்தை இப்படிப்பட்ட 'காம்போஸிட்' மில்கள் அடைகின்றன. நூலின் தரத்தைக் காப்பாற்றும் மில்கள் சில கோயம்புத்தூர் ஜில்லாவிலும் மற்ற சில ஜில்லாக்களிலும் இருக்கின்றன. மில்களிடையே இப்படிப்பட்ட வித்தியாசம்

7th March 1958] [Sri A. J. Arunachalam]

காட்டப்படுகிறது. இந்த வித்தியாசத்தை நீக்குவதற்காக, எதாவது 'ஸப்ஸிடி' கொடுத்து எல்லா நெசவுக்காரர்களுக்கும் நல்ல நூல் கிடைக்கும்படி செய்ய வேண்டும்.

கைத்தறித் துணிகளுக்கு அதிர்ஷ்டவசமாக நம் ராஜ்யத்தில் விற்பனை வரி கிடையாது. ஆனால் இங்கே நூலுக்கு விற்பனை வரி இருக்கிறது. நூலுக்குப் போடப்படும் விற்பனை வரியில் ஐந்து சத விகிதத்தைக் குறைக்க வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன். நான் கைத்தறி நெசவாளர்களின் பிரதிநிதியாக இருப்பதால், அவர்களுடைய கஷ்டங்களை இங்கே எடுத்துக் கூற வேண்டியது என் கடமை.

நான் என்ன சொல்ல விரும்புகிறேன் என்பது கனம் தொழில் அமைச்சருக்குத் தெரியும். எங்களை அவர் ஆதரிப்பார் என்ற நம்பிக்கையுடன்தான் நான் பேசுகிறேன். நான் கோரும் காரியங்களைச் செய்வதில் சில கஷ்டங்கள் இருக்கின்றன என்று கனம் அமைச்சர் கூறுகிறார். இருந்தாலும், அவர் மனது வைத்தால் வழி கண்டுபிடித்துவிடலாம். எங்கள் கஷ்டங்களைத் தீர்ப்பதற்கு அவர் முயற்சிக்க வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

மில்களுடன் கைத்தறிகள் போட்டி போட முடியாது. இயந்திரத்துடன் மனிதன் போட்டியிட முடியாது. கைத்தறி நெசவாளி, காலையிலிருந்து மாலை வரை வேலை செய்தால், நான்கு கெஜம் துணி உற்பத்தி செய்யலாம். அதே நேரத்தில் இயந்திரம் 30 கெஜம் துணி உற்பத்தி செய்ய முடியும். கைத்தறி நெசவாளி காலையில் தன் வீட்டில் இருக்கும் ஆகாரத்தைச் சாப்பிட்டுவிட்டு தறியில் வேலை செய்ய உட்கார்ந்தால், ஒரு மணி நேரம் நெய்தவுடன் சோர்ந்துபோய் விடுவான். பிறகு சிறிது நேரம் களைப்பாறி விட்டு மறுபடியும் வேலை செய்வான். ஆனால் இயந்திரம் விடாமல் தொடர்ந்து ஒரே வேகத்தில் வேலை செய்யும். மனிதனின் எந்தத் தொழிலும் ஒரு கலை. கைத்தறி நெசவாளி துணி நெய்வது ஒரு கலை. தறியில் உட்கார்ந்து கைத்தறி நெசவாளி வேலை செய்வதைப் பார்த்தால், அது மிகவும் அழகாக இருக்கும். தறியை இயக்கும்போது நெசவாளி, ராணுவ வீரர்கள் அணி வகுத்துச் செல்லும்போது 'லெப்ட், ரைட், லெப்ட், ரைட்' என்று இடது காலையும் வலது காலையும் மாற்றி மாற்றி இயக்குவது போல், இடது காலையும் வலது காலையும் மாற்றி மாற்றி இயக்குவான். நெசவாளி, உழவன் முதலிய தொழிலாளர்கள் இந்த மாதிரி உழைப்பதால் நல்ல தேக திடத்துடன் இருக்கிறார்கள். அவர்கள் தேகப்பயிற்சி செய்ய வேண்டியதில்லை. காலை 8 மணியிலிருந்து மாலை 6 மணி வரை ஒரு கைத்தறி நெசவாளி நெய்தால் அவனுக்கு மாதம் ரூ. 25 அல்லது ரூ. 30 வருமானம் கிடைக்கும். கைத்தறி நெசவாளர்கள் நேரத்தை வீணாக்காமல் நெய்வார்கள். தங்கள் வீட்டுக்குவரும் யாருடனாவது அவர்கள் சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்தால், அன்று நெசவில் 8 எடை குறைந்துவிடும். எட்டு எடை என்றால் ஒரு அடி நீளத் துணி என்று அர்த்தம். மில் தறித் தொழில், கைத்தறித் தொழில் ஆகிய இரண்டு நெசவுத் தொழில்களும் இருக்க வேண்டுமென்று அரசாங்கத்தார் விரும்புகிறார்கள். அது வரவேற்கத் தக்கதுதான். ஆனால் மில் நெசவுத் தொழிலுக்கும் கைத்தறி நெசவுத் தொழிலுக்கும் போட்டி இருக்கக் கூடாது. 1960-ம் ஆண்டில்தான் 500 கோடி கெஜம் துணியை மில்கள் உற்பத்தி செய்ய வேண்டும் என்று நிர்ணயித்திருக்கும்போது, அதற்குள் அந்த அளவிற்கு அவைகள் உற்பத்தி செய்திருக்கக் கூடாது. நிர்ணயித்தபடி தான் மில்காரர்கள் நடக்க வேண்டும். கைத்தறித் தொழிலாளர்கள் 260 கோடி கெஜம் துணியை உற்பத்தி செய்வதற்கு சர்க்கார் அவகாசம் கொடுத்திருக்கிறார்கள். இதுவரையில் நாங்கள் 160 கோடி கெஜம் துணி தான் உற்பத்தி செய்திருக்கிறோம். இதே வேகத்தில் நாங்கள் உழைத்தால் 1960-ம் ஆண்டில் நிச்சயம் 260 கோடி கெஜம் துணி உற்பத்தி செய்து விடுவோம். மில்காரர்கள், அவர்களுக்கு நிர்ணயிக்கப்பட்டுள்ள அளவிற்கு மேல் உற்பத்தி செய்யாதபடி பார்த்துக்கொள்ளவேண்டும். அதற்கான முயற்சியை அரசாங்கம் செய்யவேண்டும்.

2-40 p.m. ஒரு ஜில்லாவிற்கு ஒரு கூட்டுறவு மில் அமைத்துக் கொடுக்கவேண்டுமென்று ஏற்கனவே சொல்லியிருக்கிறேன். திருநெல்வேலி ஜில்லாவில் ஒரு மில் ஏற்படுத்தப்பட்டு எல்லாம் தயாராக இருக்கிறது. சாமான்களையெல்லாம் பூட்டியாகிவிட்டது. நாளைக்கே வேண்டுமானாலும் ஓட்டலாம். எட்டாயிரம் கதிர்கள் ஓட்டுவதற்குத் தயாராக இருக்கிறது. ஆனால் மின்சாரம் கிடைக்காமல் இருப்பதால் ஓட்ட முடியவில்லை. இதை அமைச்சர் அவர்கள் உடனடியாகக் கவனிக்கவேண்டும். ஏற்கனவே அமைச்சர் அவர்களுக்கு இந்த நிலைமை தெரியும். சம்பந்தப்பட்ட பேப்பர் அவர்கள் கையிலே இருக்கிறது. உடனடியாக அந்த மில்லை ஓட்டுவதற்கு எங்களுக்கு வசதி செய்து கொடுக்கவேண்டும். நாளையே 8,000 கதிர்களை ஓட்ட முடியும். பத்தாயிரம் கதிர்களை ஓட்டுவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. அதற்குக் கிட்டத்தட்ட அரை கோடி ரூபாய் செலவாகியிருக்கிறது. அரசாங்கத்தார் 10 லட்ச ரூபாய் உதவி செய்திருக்கிறார்கள்.

MR. CHAIRMAN : Last point.

SRI A. J. ARUNACHALAM : ரிபேட் குறைந்ததனாலே, விற்பனை ரொம்பக் குறைந்து போயிற்று. 1956-ம் ஆண்டில் ஜூலை முதல் அக்டோபர் வரை புள்ளி விவரங்களைக் கொடுக்கிறேன். 1957-ம் ஆண்டில் அதே ஆறு மாதங்களுக்கும் கணக்குக் கொடுக்கிறேன் :—

| | 1956 (லட்சம்). | 1957 (லட்சம்). |
|---|---|---|
| ஜூலை .. .. .. .. | 9·45 | 11·34 |
| ஆகஸ்டு .. .. .. | 10·75 | 11·95 |
| செப்டம்பர் .. .. .. | 9·95 | 15·75 |
| அக்டோபர் .. .. .. | 32·43 | 32·84 |
| நவம்பர் .. .. .. .. | 8·33 | 10·37 |
| டிசம்பர் .. .. .. .. | 7·59 | 8·58 |

1957 டிசம்பர் மாதத்தில் ரிபேட் குறைக்கப்பட்டுவிட்டதால், விற்பனையும் குறைந்துவிட்டது. அதுவும் எப்படி விற்பனை ஆயிற்று என்றால் அரசாங்கம் ரிபேட்டை 3 நயா பைசா குறைத்துவிட்டாலும், நெசவு சங்கங்கள் தங்களுடைய பணம் 4 நயா பைசா நஷ்டம் ஆனாலும் சரி என்று அரசாங்கத்தார் கொடுக்கும் 6 நயா பைசாவோடு 4 நயா பைசா கூடப் போட்டு 10 நயா பைசாவாக ரிபேட்டைத் தொடர்ந்து கொடுத்தார்கள். அதுவும் பொங்கல் காலமாயிருந்ததால், அப்படிச் செய்தார்கள். அதனால்தான் எட்டு லட்சம் கெஜம் விற்பனை ஆயிற்று. அரசாங்கம் இந்த ரிபேட்டைக் குறைத்ததால் எவ்வாறு நெசவுத் தொழில் பாதிக்கப்பட்டிருக்கிறது என்பதைத் தெரிவிப்பதற்காகத்தான் இந்தப் புள்ளி விவரங்களை நான் இங்கே கொடுத்தேன். கடைசியாக......

MR. CHAIRMAN : Last point. Two minutes more.

SRI A. J. ARUNACHALAM : ஒரு யோசனை சொல்லுகிறேன். ரூபாய்க்கு 1½ அணா ரிபேட் கொடுத்ததால் 'கன்ஸ்யூமருக்கு' அனுகூலம் கிடைத்தது. அது இப்பொழுது 1 அணாவாகக் குறைக்கப்பட்டு விட்டது. இதுவரையில் 'கன்ஸ்யூமருக்கு' கிடைத்த சலுகையை நெசவாளர்களாவது பெறுவதற்கு வழி என்ன? நெசவு சங்கங்களிலே கூலி வாங்குகிறார்கள். அவர்கள் நெசவாளர்களுக்கு நூல் கொடுக்கிறார்கள். நூலைக் கொண்டுபோய் ஆடையாக நெய்து கொண்டுவந்து கொடுக்கிறார்கள். நெசவு சங்கங்கள் நூலைக் கொடுக்கின்றன. நூல் கிரயத்தில் ரூபாய்க்கு ½ அணா ரிபேட் கொடுக்கும்படி சிபார்சு செய்யலாம். அல்லது கூலியில் ½ அணா ரிபேட் கொடுக்கும்படி சிபார்சு செய்யலாம். இம்மாதிரி புதிய முறையிலே சிபார்சுகள் செய்து ஒரு பக்கம் அரசாங்கம் ரிபேட்டைக் குறைத்ததை மறு பக்கம் நெசவாளர்களுக்கு உதவியாக இருக்கும்படியாவது வாங்குவதற்கு முயற்சி செய்யலாம். அவர்களுக்கு இப்பொழுது ரூபாய்க்கு 1 அணா லாபம் கிடைக்கிறது. மேலும் ½ அணா கிடைக்கும்படி

7th March 1958] [Sri A. J. Arunachalam]

கவனத்திற்குக் கொண்டுவந்திருக்கிறோம். அதைச் சாதிக்க வேண்டிய முயற்சி எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, எனக்குப் பேச அவகாசம் கொடுத்த சபைத் தலைவருக்கு நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

Dr. A. SREENIVASAN : The hon. Member who spoke just now has not given the reasons why so much stock is lying unsold. I think the Hon. Minister in charge will, in the course of his reply to the debate, explain the reasons for it.

The Hon. Sri R. VENKATARAMAN : Increased production That is all.

* Sri P. T. RAJAN : Mr. Chairman, going through the speech of the Hon. the Minister in charge of Finance and Education, I find that he has stated under the heading Education ' The annual expenditure has increased by nearly Rs. 1 crore even though the State has been reorganized and its territory and population reduced. For the coming year, we are providing Rs. 12·04 lakhs. As usual, rather more than one-half of the total expenditure continues to be devoted to primary education. Rs. 4·91 lakhs in 1956–57, Rs. 6·54 lakhs in 1957–58 and Rs. 6·59 lakhs in the coming year '. I am glad to note that education is receiving encouraging support from the Government. I would like to know whether we are getting our money's worth. The Government can spend any amount of money on Education and other departments which tend to produce the wealth of the country. Schools are being increased every year. Elementary schools, high schools and colleges are being increased in number every year. In the course of increasing the strength of these institutions, we must see whether they have got the proper teaching staff. In this connexion, I am reminded of an incident in the co-operative movement which aimed at increasing the number of societies. There were too many societies without proper personnel to manage. Time came when the Government were called upon to practically scrap the department. The task of rectifying the defects and liquidating societies had to be seriously undertaken by the department. Eventually, only those societies which functioned with proper men to look after their affairs were left with the result that the department is doing very useful work. I am glad to see that my hon. Friend the Leader of the House is in charge of that department now. I do not want a similar fate to overtake the Education Department. The other day a representative of the schoolmasters told us that the teachers had a sense of frustration and disappointment, with little or no hope for the future. They are the people who are asked to undertake the task 2-50 p.m. of bringing up the future citizens of this State. I don't blame the teachers as even the representative of the schoolmasters said that, only as a last resort, Graduates and under-Graduates sought appointment in the Education Department. To that miserable position we have been reduced. I would rather approve of spending the extra one crore of rupees on the payment to teachers, to have a well-trained, well-equipped teaching staff and to reduce the number of schools. Let us get the best result for the money we spend.

[Sri P. T. Rajan] [7th March 1958

Let the standard of education be maintained. While discussing with some friends, incidentally I asked, " How many colleges are there in this State and how many of them have got Principals or men of outstanding ability—men who can inspire their students to do their best? " I was told that it was 10 per cent. I was not inclined to believe even that. But as that information emanated from a distinguished educationist, I accepted that. If out of one hundred, you are going to have only 10 able men to tackle our coming generation, what is going to be the future of this country? I should like the Hon. the Leader of the House to tell us about this. After all, schools and colleges are meant, especially when the foreigners have left this country, to produce leaders of men—not servants or men who would fill positions as clerks, Secretaries, higher subordinates and other non-important Government posts. No doubt, any institution requires well-trained men, well-disciplined men. But what the country as a whole requires is a band of leaders, not at the top only, but at all intermediate levels. That ought to be the aim of education. If that aim is gone, let us leave teaching to the tutorial colleges. The Government need not spend money on colleges and schools. They will give scope to non-officials to earn their living and to prepare boys for getting through examinations. Sir, in this connexion, I would like to suggest to the Government that they should have a programme, a ten-year programme, for sending abroad boys and girls from every Tamil district, without distinction of caste, creed or being rich or poor. Let us pick out the best among them with the necessary background—background of family, background of character—and send them to Universities in other countries. Let them learn foreign languages. Let them learn research work and come back to this country to make education more useful than what it is to-day. As the world is moving fast, we want our boys and girls to know practically all international languages. We want to get ideas from Universities in other countries. These boys and girls should be the medium through which we can get them. I request the Hon. the Leader of the Opposition though he is not in direct charge of the Department, to consider this matter at the Cabinet level, not that he should dicate to his colleague, the Education Minister.

THE HON. SRI R. VENKATARAMAN : He is very enthusiastic.

* SRI P. T. RAJAN : Thank you, Sir. Mere enthusiasm is not going to help.

THE HON. SRI R. VENKATARAMAN : He is forecasting events.

* SRI P. T. RAJAN : I am not forecasting events.

THE HON. SRI R. VENKATARAMAN : I said, " You are forecasting events " because instead of saying " the Leader of the House " you have said "the Leader of the Opposition ". That was why I said, " You are forecasting events ".

7th March 1958]

* Sri P. T. RAJAN : I would very much like my hon. Friend to be in that place. It is no flattery. I want it to be so because we get very few persons to fill positions of responsibility. Sir, I was listening to the speech of my hon. Friend, Sri Ranganathan the other day. He was a very senior officer, a distinguished educationist of this State. It was a harrowing tale, a tale which made me sad, which made me even despair of the future of education. He told us of instances where orders were kept pending on petitions sent to the Department, not for weeks, not even for months, but for years. Sir, it may be that the Department has got much more work to be done. If that be the case, increase the number of officers in the Department and divide the work. Instead of having one Director, have four Directors, divide the work, and fix the responsibility on each Director. Instead of this, the Government have one Director. However distinguished and however eminent he may be, it is not possible for him to cope with the work nowadays when there are so many complaints about delays. 3 p.m. So many petitions are sent to Government, and the Government feel, as the custodians of the people's rights, that every paper should be examined. If the officers devote time to deal with the work of the department, after consigning useless papers to the waste paper basket, something useful will be done. I read yesterday that in Kerala the Government had gone in for more Directors to be put in charge of each section and to fix responsibility on each of them individually. If this is done, there is the chance of work being done within a reasonable time. I would even go to the extent of saying that there may be a separate Minister for Education and a separate Secretary in sole charge of Education. If our educational system is really going to be effective, if it is going to contribute to the progress of this country, serious attention to this aspect must be paid failing which our Independence will be Independence in name and not in reality.

Sir, a good deal was heard about the food position. Figures were quoted. Unfortunately, I am a very poor student of mathematics. Sometimes I cannot even add and say that five *plus* five makes ten. Instead of this, I may say five *plus* five makes nine.

Mr. CHAIRMAN : Very good company!

* Sri P. T. RAJAN : But leaving statistics apart, I want to know whether we have got enough food. If we have got enough food, there would not be any cry at all saying that food is not available. We may say that money is not available to buy food. Here we have no money to buy food, and if there is money, there is no food to buy. Time was when the Government of the day wanted to stop fragmentation of holdings. They wanted consolidation of lands with a view to increasing food production. This was done when the foreigner was ruling the country. To-day when our own Ministers are there, they want to divide the land—parcel out the land—into so many bits so that in the name of democracy,

[Sri P. T. Rajan] [7th March 1958

in the name of the protector of the poor and the landless, each man might get a strip of land. By all means let Government do it. About thirty years ago, people like myself were prepared to offer to Government that they should take over all our lands. Why?
3-10 p.m. Because we were unable to get back the money spent on the lands, and we were not in a position to pay the kist even to Government. We would have been extremely happy if the Government had taken over our lands then. We thought that suggestion was good. But that did not happen. Lands are now yielding something and landowners are getting something in return for their trouble. Political slogans and ideologies require that the landed classes should disappear. Yes; let them disappear. But at what cost? At the cost of feeding the people of the country? The Government may dislike the landed classes. The landed classes may be rogues. They may be parasites. But they have contributed their mite to the prosperity of the Courts from the dawn of ages. The landed classes stood for the culture of this country, for the hospitality of this country, and for the high ideals of the people of this country. The Government are trying to put them down now. By all means let them do so. This is like cutting the nose to spite the face. If the Government feel happy about this, let them do so. As the hon. Member Dr. Sreenivasan said, the sooner the Government did it, the better. Instead of killing them inch by inch, take away the lands and be done with it. Put the knife through once for all, and you would not thereafter have any problem of the wretched landed classes.

I come to one other item, which may be controversial, unnecessarily perhaps controversial—but, anyhow, I promised the other day that I would deal with the problem of Tamil Nad. Sir, in 1917 the South Indian Liberal Federation was founded with a view to having a Federation of the Southern States, i.e., States south of the Vindhyas. Madras practically contained three-fourths of the Federation. As time went on, our Andra friends left Madras, quite rightly perhaps. Tamilians swamped them even in their own part of the country in the matter of offices, in the matter of patronage, and in the matter of emoluments. The Andhras wanted to be masters in their own area. They wanted to get away. We could not say, 'No' to them. We said, 'If you want to go away, by all means get away'. Next the Kerala people wanted to get away and then again the Kannadigas. Who are left now? The Tamils. Well, whether they like it or not, they have got to face the music by themselves. Whether we call it Tamil Nad or Madras State, that does not matter to me. What is there in name? A rose will still smell sweet, by whatever name you may call it. All these States are now functioning separately. Who is responsible for all this? We may say that historical events have brought about the division of the country on a linguistic basis. I go a step further and say that this is the effect of the policy of the Congress that there should be mass contact. 'The mass can be contacted only by talking to the masses in their own language'. Quite right. Then let there be States on a linguistic basis.

7th March 1958] [Sri P. T. Rajan]

Having done that, you tell them, 'Do not think in terms of your own State; do not think in terms of your language; do not think in terms of your culture'. If you do not want them to do that, why did you divide the country? Having divided the country, you must face the logical consequence. Each State wants to develop in a manner which suits its genius. Is it a crime, if a man wants to be master in his own house? Will any of my hon. Friends here say that he does not want to be master in his own house? 3-10 p.m.

Sri K. BALASUBRAMANYA AYYAR: Except to his wife. (Laughter.)

* Sri P. T. RAJAN: Really speaking, ladies are the masters of the household and we are masters only by their sufferance. (Laughter.) At least, in name, we are masters. We talk of Dravida Nad. You cannot say there was no such thing as Dravida Nad except that some people want it. Do not talk about it in a sneering manner. We might have a Dravida Nad and the South Indian Liberal Federation also might be revived in a new garb. Now, Sir, we have a Zonal Council for the South. The Southern Zonal Council consists of the States of Andhra, Kerala and Tamil Nad. If it is going to function as visualised by those who conceived the idea of Zonal Councils, then it is going to be a Federation. You can put a skirt or a saree on a woman. A woman is a woman. She may put on a cap; yet she is a woman.

Mr. CHAIRMAN: Men too.

* Sri P. T. RAJAN: You might get Dravida Nad in a different garb, with partners willing to act together in matters which affect them in common. They will be masters in their own houses but willing to co-operate with others in all matters which concern them all. It must, of course, be a natural growth. I am not one of those politicians ever anxious to achieve results quickly by force. History does not like the pace being forced. It must be a natural growth, not an artificial growth.

Leaving Dravida Nad, I come to Tamil Nad. The mere mention of this name might be an anathema to some. They might even think that it is a crime to think of Tamil Nad. The thing is, some of us cannot forget the past. We might even forget the present but not the past. Tamilians had a glorious past. They had their traditions, their own culture and their own arts. Tamilians like Englishmen did not invade other countries with arms with a view to conquering them. Tamilians like Englishmen went to other countries as tradesmen and businessmen. While doing business on the one hand, they spread their culture on the other. You see signs of that culture in the temples in remote corners of the East. We cannot forget that. You may prevent us from giving expression to our thoughts. But we cannot stop thinking about those things. As one of the famous Roman historians said, 'You may prevent people from talking but you cannot prevent them from thinking.' Taking Tamil Nad, the question arises whether Tamil Nad can be a viable State, an independent State, which can

defend itself. Let us see from a purely academic point of view whether it cannot be viable and whether it cannot be independent. I will take the latter item first. I may ask my friends whether India is in a position to defend herself against an attack by a powerful opponent. No. Her Army, her Navy and her Air Force are very limited in size. We might be told that nobody will attack us and that if anybody attacks us, somebody will come to our rescue. If that be the case with India, I should like to know whether we will not be helped by somebody if anybody attacks Tamil Nad.

SRI A. M. ALLAPICHAI : Some other part of India will come to our rescue.

* SRI P. T. RAJAN : Somebody else, I said. You confine yourself to Indian geography. But I go beyond that. After all, it is not understood by people that the League of Nations came into existence for the purpose of protecting smaller nations from attacks by powerful nations. In the first World War, they said that they were fighting the War with a view to giving protection to smaller countries and giving them the right to decide their future. We had then the League of Nations. It failed. The Second World War came. The conqueror and the conquered were left more or less in the same position. The United Nations came. Whether it is able to achieve its object or not, it is there to provide help to smaller nations. Such being the case, I am not at all worried about the defence of Tamil Nad. Secondly, can it be independent? Can any one of us here say that any nation in the world can be independent in the sense of self-sufficiency as regards its requirements?

SRI MOHAMED RAZA KHAN : In population it can be. (Laughter.)

3–20 p.m. * SRI P. T. RAJAN : In population, they are not only self-sufficient but more than self-sufficient. No country can be independent in this sense. After all, we depend upon some country or other for our requirements. No country—does not matter America or even, let us assume, China when it becomes all powerful—can get all her requirements within her own borders. So, let us not talk about independence in the sense that we can afford to live without any association with other countries, without any relations with other countries. We must be friendly especially with our neighbours. The wealth of a country is its people, first and foremost. Then, we talk about raw materials. Sir, I feel that the Tamilian people are the real wealth of this country. The unfortunate tragedy is that the Tamilian had gone out of Tamil Nad, scattered himself all over the world and contributed to the material prosperity of other countries but not his own motherland. But what is the return for his contribution? He is given treatment that is not given even to a wild beast. Unfortunately, we in this State are not in a position to help our countrymen living outside India. If they are citizens of other countries, we have no business, rightly or wrongly, to interfere with their affairs. Whatever

7th March 1958] [Sri P. T. Rajan]

comes to them, good or bad, they must accept. But if they are Tamilians and if their right of being naturalized citizens of those countries is denied and fair treatment is not meted out to them, is it not our duty to protect them? Is it not our duty to go to their rescue, whether our help will be effective or not?

Sir, we have got people who can increase the prosperity of the people. As my worthy Friend Sri O. P. Ramaswami Reddiar said, if we have not got things in our own State, we can persuade our neighbours to give them and we will persuade them. We will persuade Andhra Pradesh to give us what we want. Let them not give as charity. Just as they are selling their farm produce, let them sell water. So also Kerala State, which sell cardamom and tea, can sell water. We do not want any charity from them. So, even if there is a separate Tamil Nad, she must have friendly relations with her neighbours. An independent country cannot be so independent as to say that she would have nothing to do with others. If only our people really take into their heads to do their best and spare their time and energy for the prosperity of this country, they can be masters in their State dealing with matters which affect them. Sir, I may be asked, 'Are you prepared to have Tamil Nad here and now?' I am afraid I will have to say 'No'. Why? To run the country we want a race of men, men of integrity, men of character and men with a sense of duty and a sense of discipline. Have we got such men in this State now? No. I may be accused of slandering my fellowmen but I am facing facts. If I am slandering them, it is with a view to correct ourselves, not with a view to pose as superior to others. The other day the hon. Member Mr. O. P. Ramaswami Reddiar said that we could not trust another man in the country now. Sir, apart from individual friendship, if somebody tells me that he can do something, I cannot trust him. That is the unfortunate position in which we are to-day. If I am in a position to believe the word of a Tamilian whom I can pick out at random, all right. If we are fit, we can run the country. Unfortunately, once having been slaves for so many centuries, we have lost all those qualities which could make us worthy citizens of this Tamil Nad. It may be that I may not live to see a separate Tamil Nad. But I am appealing to the younger generation, boys and girls of to-day, that they should read their own history. Let them be inspired by a sense of adventure. When I say 'sense of adventure', I do not mean adventurers. There are a number of adventurers, political and otherwise. Let them be men of integrity and character with a sense of duty and discipline. Let them develop into a people who will command respect. Let them then think of running Tamil Nad as a State, either an Independent State or a partly Independent State. Let them attempt it and if they fail, what if? It is far better to have loved and lost than to have never loved at all.

SRIMATHI SARASWATHY PANDURANGAM : கனம் தலைவர் அவர்களே, இந்த ஆண்டு வரவு செலவுப் பட்டியலைத் தயாரித்த நிதி அமைச்சர் அவர்களை நான் மிகவும் பாராட்டுகிறேன். முக்கியமாக

விவசாயிகள் எவ்வாருக உற்பத்தியைப் பெருக்கவேண்டும் என்பதற்காகப் பல வழிகளில் அவர்களுக்காக நிதியை ஒதுக்கியதுமல்லாமல், செலவு இனங்கள் போக ரூ. 3,000-க்கும் அதிகமாக வருமானம் வருபவர்களுக்கு அதிகப்படியான வரி விதித்திருப்பதை நான் மிகவும் வரவேற்கிறேன். ஏனென்ருல், சோஷலிஸ்டு சமுதாயம் என்று சொல்லும்போது, காந்தியடிகளின் எண்ணத்தை நிறைவேற்றவேண்டுமாளுல், செல்வம் அதிகமாக ஒரே இடத்தில் குவிந்திருப்பது கூடாது. அந்தக் கருத்தை மனதில் வைத்துக்கொண்டு, தங்களுக்கு வேண்டிய வருவாய் போக உபரியாக இருக்கிற வருமானத்தின்பேரில், அதாவது ரூ. 3,000-க்கு மேற்பட்ட வருமானத்தின் பேரில், வரி விதிக்க வேண்டுமென்ற திட்டத்தை நான் ஆதரிக்கிறேன். விவசாயத் தொழிலில் ஈடுபட்டுள்ள உழைப்பாளிகளுக்கு நல்ல ஊதியம் கிடைக்கவேண்டும். அதில் முக்கியமாகப் பெண்களும் வேலை செய்கிருர்கள். ஆண்களுக்குக் கூலி ஒன்று, பெண்களுக்குக் கூலி வேறு. அதாவது பெண்களுக்குக் குறைவான கூலி என்று இருப்பதை நான் எதிர்க்கிறேன். உழைப்பு இருவருக்கும் ஒன்ருகத்தான் இருக்கிறது. விவசாயப் பெண் நடவு நடுவதற்கு காலையில் குனிந்தால், மாலை வரையிலும் கஷ்டப்பட்டு உழைக்கிருள். ஆண்களுக்கு நான்கு படி என்ருல், பெண்களுக்கு இரண்டு படி என்று குறைத்துக் கூலி கொடுக்கப்படுகிறது. அதை மாற்றி ஆண்களுக்கும் பெண்களுக்கும் ஒரேமாதிரியான கூலி கொடுப்பதற்கு வேண்டிய ஏற்பாட்டை நமது சர்க்கார் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

சென்னை நகராண்மைக் கழகத்தில் நான் ஒரு அங்கத்தினராக இருக்கும் காரணத்தை ஒட்டி, சென்னை நகரத்திலுள்ள ரோடுகளைப்பற்றிச் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். நமது ராஜ்யத்திலுள்ள இதர நகரங்களுக்கு சென்னை நகரத்திலிருந்து பல ரோடுகள் போகின்றன. அவைகளெல்லாம் படுமோசமாக இருக்கின்றன. அவைகளைச் செப்பனிடுவதற்கு நகராண்மைக் கழகத்தினிடம் போதிய நிதி இல்லை. பல ஆயிரக் கணக்கான மோட்டார்கள் சென்னை நகரத்திலுள்ள ரோடுகளில் ஓடிக்கொண்டிருக்கின்றன. அவைகளிடமிருந்து வரியை நமது சர்க்கார் வசூலிக்கிருர்கள். அப்படி சர்க்காருக்குக் கிடைக்கும் வருமானத்தில் ஒரு பகுதியை நகராண்மைக் கழகத்திற்குக் கொடுத்தால், சென்னையிலுள்ள ரோடுகளை மிக அழகாகச் செப்பனிட முடியும். அப்படிச் செப்பனிட்டாலும் கூட, அதன் பிறகு மின்சார இலாகாவினர் ரிப்பேர் செய்யும்பொழுது ரோடுகளைத் தோண்டிவிட்டுப் பாழ்படுத்தி விடுகிருர்கள். இந்த நிலைமையை மாற்றி, இரு சக்திகளும் ஒன்ருகச் சேர்ந்தாலோசித்து இந்த வேலைகளைச் செய்தால், நம்முடைய பணம் விரயம் ஆகாமலிருக்கும் என்பதை நான் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

3-30 p.m. படிக்கும் குழந்தைகளுக்குப் பகல் உணவு கொடுப்பதற்காக சர்க்கார் பணம் ஒதுக்கி யிருப்பது மிகவும் வரவேற்கத்தக்கது. குழந்தைகள் வருங்காலத்துச் செல்வங்கள். அந்தச் செல்வங்களுக்கு அறிவை மட்டும் கொடுக்காமல், ஆகாரத்தையும் கொடுப்பதற்காக நமது சர்க்கார் நிதி ஒதுக்கியிருப்பது மிகவும் பாராட்டத்தக்கதாகும். உணவு உற்பத்தி, பற்ருக்குறை என்று சொல்லும்போது மக்கள்தான் அதில் அதிகப் பொறுப்புள்ளவர்களாக நடந்துகொள்ளவேண்டுமென்பதைச் சொல்ல ஆசைப்படுகிறேன். நேற்று நம்முடைய கனம் விவசாய அமைச்சர் உணவுப் பற்ருக்குறை இருக்கும்பொழுது, உணவு எவ்வாறு உட்கொள்ளுவது என்பதுபற்றி மிகவும் விரிவாக எடுத்துச் சொன்னுர். பல தானியங்களை உட்கொள்ள வேண்டுமென்று சொன்னுர். இந்த ஆண்டு உணவு நிலைமையைப் பார்த்தால் திருப்திகரமாகத்தான் இருக்கிறது என்று சொல்ல ஆசைப்படுகிறேன். சென்ற ஆண்டு நவம்பர் மாதம் நியாய விலைக் கடை விற்பனையையும் இந்த ஆண்டு நவம்பர் மாத நியாய விலைக் கடை விற்பனையையும் பார்த்தால், இந்த ஆண்டு விற்பனையில் எத்தனையோ மூட்டைகள் குறைந்து விட்டன. இந்த ஆண்டில் ஒரு நாளைக்கு ஒரு மூட்டை அரிசி கூட விற்காமல் இருந்தது. சென்ற ஆண்டில் ஒரு மணி நேரத்தில் 20 மூட்டைகள் அரிசி விற்பனையாயிற்று. அதைப் பார்க்கும்பொழுது இப்பொழுது உணவுப் பற்ருக்குறை அவ்வளவாக இல்லை என்று நான் எண்ணுகிறேன். இந்தப்

7th March 1958] [Srimathi Saraswathy Pandurangam]

பற்றுக்குறையைப் போக்குவதற்கு மக்களுடைய பூரண ஒத்துழைப்பு இருக்க வேண்டுமென்பது என்னுடைய பெரிய அவா. மில் அரிசி 1 ஆழாக்கு சாப்பிடும் இடத்தில் கைக்குத்தல் அரிசி ½ ஆழாக்கு சாப்பிட்டால் போதும். மீதி ½ ஆழாக்கை மிச்சப்படுத்தலாம். அந்த ½ ஆழாக்கு இன்னொருவனுக்குத் தேவைப்படும் என்ற எண்ணம் நமக்குக் கிடையாது. நாவை அடக்குகின்ற சக்தி நமக்கு இருக்கிறதே ஒழிய நம்மை அடக்குகின்ற சக்தி கிடையாது. இன்னொன்று சொல்ல விரும்புகிறேன். கைக்குத்தல் அரிசி சாப்பிட வேண்டுமென்றால், ஆங்கில வைத்தியக் கல்வி பயின்ற டாக்டர்கள், "கைக்குத்தல் அரிசி எப்படி இருக்கும்? அதில் உமி நீக்கப்பட்டிருக்குமா? அதில் 'பி' வைடமின் இருக்குமா? அதில் சத்து இருக்குமா?" என்று கேட்கிறார்கள். இது மிகவும் வருந்தத்தக்கது. அரும்பெரும் தலைவராகிய கனம் அமைச்சர் ஸ்ரீ பக்தவத்சலம் அவர்கள் சில சிறைச்சாலைகளைப் பார்வையிடச் சென்றபோது, அங்கேயிருந்த கைதிகள் அவர்களிடம், தாங்கள் கைக்குத்தல் அரிசியை உட்கொள்ள முடியாது என்றும், மில்லில் மினுக்கிய அரிசிதான் வேண்டுமென்றும் கூறியதாகத் தெரிவித்தார்கள். மக்கள் கைக்குத்தல் அரிசியைச் சாப்பிட முன்வருவதில்லை. கைக்குத்தல் அரிசி சத்துள்ள அரிசி. டாக்டர்கள் கூட இதைப் புரிந்துகொள்ளவில்லை. அரிசிப் பற்றுக்குறை நீங்க வேண்டுமானால், எல்லா மக்களும் கைக்குத்தல் அரிசியைச் சாப்பிட வேண்டும். இதை எல்லோரும் உணரவேண்டும்.

மக்கள் பெருக்கைப்பற்றி சகோதரர் ஒருவர் குறிப்பிட்டார். பரந்த இந்தியாவில் சுதந்திர காலத்திற்கு முன்பு 37 கோடி மக்கள் இருந்தனர். ஆனால் பாகிஸ்தான் பிரிந்த பிறகு, இந்தியாவில் மக்கள் 40 கோடிக்கு மேல் இருப்பதைக் காண்கிறோம். பாகிஸ்தான் பிரிந்ததினால் இந்தியாவின் நிலப் பரப்பு குறைந்திருக்கிறது. ஆனால் இப்போது ஜனத்தொகை அதிகரித்திருக்கிறது. இந்தப் பிரச்னையைத் தீர்க்க வேண்டுமானால், பெண்களின் திருமண வயதை 20 ஆக நிர்ணயிக்க வேண்டும். இருபது வயதிற்கு மேல்தான் பெண்கள் கல்யாணம் செய்துகொள்ள வேண்டுமென்று சட்டமியற்ற வேண்டும். அவ்வாறு செய்தால் ஜனத்தொகை அதிகரிக்காது என்று சொல்ல விரும்புகிறேன். மக்கள் பலம் பெற்றிருந்தால், ஜனத்தொகை பெருகாது. கைக்குத்தல் அரிசியை மக்கள் சாப்பிட்டால், மக்கள் பலம் பெற்றவர்களாக இருப்பார்கள்.

இந்நாட்டில் இப்போது பல வைத்தியக் கல்லூரிகள் இருக்கின்றன. பல புதிய வைத்தியக் கல்லூரிகளும் திறக்கப்படுவதைக் கண்டு நான் சந்தோஷப்படுகிறேன். ஆங்கில வைத்திய முறைதான் நம் நாட்டுக்கு உகந்தது என்பதை நான் ஒரு விதத்தில் ஏற்றுக்கொள்ளுகிறேன். ஆனால், மற்றொரு பக்கத்தில், மற்ற வைத்திய முறைகளுக்கும் சரி நிகர் சமானமான மதிப்புக் கொடுப்பதுதான் உயர்ந்த லட்சியமாகும் என்று கூறுவேன். யூனானி வைத்திய முறை தரத்தில் குறைந்தது என்றோ, சித்த வைத்திய முறை தரத்தில் குறைந்தது என்றோ கருதக்கூடாது. எல்லா வைத்தியத்திலும் நல்ல முறைகள் இருக்கின்றன. எல்லா வைத்திய முறைகளையும் சரி சமமாகக் கருத வேண்டும். எந்த வைத்திய முறையையும் ஏற்றுக் கொள்வதற்கு இந்நாட்டு மக்கள் தயாராயிருக்கிறார்கள். இப்போது நம் ராஜ்யத்தில் நாட்டு வைத்தியக் கல்லூரி இருக்கிறது. அந்தக் கல்லூரியில் படித்துத் தேறுபவர்களுக்குக் குறைந்த மதிப்புள்ள செர்டிபிகேட் கொடுக்கப்படுகிறது. ஆங்கில வைத்தியக் கல்லூரியில் படிப்பவர்கள் எத்தனை வருஷங்கள் படிக்கிறார்களோ, அத்தனை வருஷங்கள் இந்தக் கல்லூரியில் படிப்பவர்களும் படிக்கிறார்கள். ஆனால் ஆங்கில வைத்தியம் படித்தவர்களுக்குக் கொடுக்கும் பட்டத்தின் மதிப்பைவிடக் குறைந்த மதிப்புடைய பட்டத்தை இந்தக் கல்லூரியில் படித்துத் தேறுபவர்களுக்குக் கொடுக்கிறார்கள். இது கண்டு நான் மிகவும் வருத்தப்படுகிறேன். எல்லா மூன்று வைத்தியப் படிப்பிற்கும் காலத்தை ஐந்து வருடங்களாக வைத்திருப்பதை நான் வரவேற்கிறேன். ஆனால் கொடுக்கும் பட்டங்களில் வித்தியாசம் காட்டக்கூடாது. ஆங்கில வைத்தியக் கல்லூரியில் படித்துத் தேறுபவர்களுக்குக் கொடுக்கும் பட்டத்தின் மதிப்புடைய பட்டத்தையே நாட்டு வைத்தியக் கல்லூரியில் படித்துத் தேறுபவர்களுக்கும் கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

தாய் சேய் நல நிலையங்களை அரசாங்கத்தார் அமைத்திருக்கிறார்கள். நம் நாட்டில் தாய்களையும் குழந்தைகளையும் எவ்வாறு பராமரிக்க வேண்டுமென்று காந்திஜீ விரும்பினாரோ, அவ்வாறே அவர்களைப் பராமரிப்பதற்கு அரசாங்கத்தார் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். அந்தத் திட்டத்தை இன்னும் விஸ்தரிப்பதற்காகப் பணம் ஒதுக்கியிருப்பதற்காக நான் சர்க்காரைப் பாராட்டுகிறேன்.

சினிமா வரியைப்பற்றிக் குறிப்பிட விரும்புகிறேன். இந்த வரியை நான் வரவேற்கிறேன். நமக்கு மிகவும் முக்கியமானவை உணவும் உடையும். உணவும் உடையும் நாட்டில் பற்றாக்குறையாக இருக்கும்போது, சினிமாப் படத்தைப்பற்றி நாம் கவலைப்பட வேண்டாம். சினிமா ஒரு கலைதான் என்றாலும், இன்று சினிமாப் படங்கள் கலையை வளர்க்கக் கூடியவையாக இல்லை. இந்தக்காலத்தில் வெளிவரும் சினிமாப் படங்களைப் பார்த்து குழந்தைகள் கெட்டுப் போகிறார்கள். இன்றைய சினிமாப் படங்களைப் பொறுத்தவரையில், இந்த வரியை நான் வரவேற்கிறேன்.

மேலும், இப்போது குதிரைப் பந்தயங்கள் நடந்து வருகின்றன. இது குறித்து நான் வேதனைப்படுகிறேன். அடுத்த ஆண்டு குதிரைப் பந்தயங்கள் நடத்துவதைத் தடுப்பதற்கான சட்டத்தைக் கட்டாயம் கொண்டுவர வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். மக்கள் நலனுக்காகப் புரட்சிகரமான மது விலக்குச் சட்டத்தைக் கொண்டுவந்ததுபோல், குதிரைப் பந்தய ஒழிப்புச் சட்டத்தையும் கொண்டுவர வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அமெரிக்காவில் நீக்ரோக்களை இழிவாக நடத்துகிறார்கள். அங்கே கறுப்பர்-சிவப்பர் என்ற வித்தியாசம் பாராட்டப்பட்டுவரும்போது, இங்கே தீண்டாமை ஒழிப்புச் சட்டத்தை வெற்றிகரமாக அமல் நடத்தி வருகிறோம். அப்படியிருக்கும்போது, குதிரைப் பந்தய ஒழிப்புச் சட்டத்தையும் கொண்டுவர வேண்டும்.

THE HON. SRI R. VENKATARAMAN : மக்கள் குதிரைப் பந்தயத்தைப் பார்க்க வேண்டுமென்பதற்காக குதிரைப் பந்தயங்கள் நடத்தப்படுவதில்லை என்றும், குதிரைகளை நன்றாக வளர்ப்பதற்காகவே குதிரைப் பந்தயங்கள் நடத்தப்படுகின்றன என்றும் சொல்லப்படுகிறது.

SRIMATHI SARASWATHY PANDURANGAM : வரவு செலவுத் திட்டத்தைச் சமர்ப்பித்த கனம் நிதி அமைச்சர் அவர்களுக்கும் மற்ற கனம் அங்கத்தினர்களுக்கும், தங்களுக்கும் என் வணக்கத்தைத் தெரிவித்துக்கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

3-40 p.m. MR. CHAIRMAN : I am again faced with a very large number of speakers. So, the time for each speaker is restricted to ten minutes. Hon. Members will please adhere to this time-limit.

SRI V. GURUNANDAN ROW : Mr. Chairman, Sir, within the limited time at my disposal, I propose to deal only with two matters. The first is the situation created by the strike notice given by the electricity workmen of the five systems under the Madras State Electricity Board. Sir, the interests of the electricity workers had been for a long time absolutely neglected by the State Government when they were Government servants and before the formation of the Board. It is only after the formation of the Board that most of the facts have come to light after the strike notice given and the matter has been taken up by the Commissioner of Labour in conciliation. It is now known that out of 41,000 workmen under the Board, more than 10,000 workmen were employed by the Government and are now employed by the Board, who are called casual labour and who have been so for more than

7th March 1958] [Sri V. Gurunandan Row]

four or five years. There is no dearness allowance for them and their total emoluments come to Rs. 32–4–0 per month. I am yet to see any employer paying his workman Rs. 32–4–0 per month as total emoluments and getting away with it. Sir, that is the position of 10,000 employees under the Madras State Electricity Board. They have no security of service whatsoever. They have no other business whatsoever. As far as the remaining workers are concerned, there are so many classifications of workers. There are another 32,500 workers who are classified as nominal muster roll workers. There is no kind of permanency for them. What does it mean? Their services can be dispensed with at any time. There is another class of workmen called work-charged establishment. They number about 1,500. They are engaged only for a particular work and they remain there only till that work is completed. Even they have no security of service. The balance of about 8,000 workers is called the Operation Subordinate Service staff. One would think that when they were in the Operation Subordinate Service, their service conditions would have been better. No, Sir. Out of the 8,000 and odd workers who are called the Operation Subordinate Service staff, nearly 6,000 workers have still not been confirmed. There are only about 2,000 workers out of the entire 41,000 workers who have some sort of permanency as in Government service. This is the state of affairs as far as the employees under the Electricity Board are concerned.

As far as the Operation Subordinate Service workers are concerned, what are their wages? They get Rs. 18 as basic wage and Rs. 30 as dearness allowance. So, their total emoluments come to Rs. 48. To-day, the total emoluments of a worker in the Buckingham and Carnatic Mills or a worker in the textile mills in Coimbatore come to Rs. 85 at least whereas the Power House workers who are working by the side of the Buckingham and Carnatic Mills worker, get only Rs. 48. How is it that this state of affairs continues for ten years? I must tell the hon. Members that there has not been any strike for even a single day and that these workmen have been carrying on like this on these starvation wages for more than ten years. It was only after the formation of the Board that they got the right to go before the Commissioner of Labour for conciliation. Now, one of their demands is that this dispute may be referred to a tribunal if the Board cannot be made to concede the just demands of the workers. Even in regard to conciliation, what was the stand taken by the Board? The Board does not say that the demands are unreasonable. It does not say that the Board has no capacity to pay. But, at the same time, it is not able to do anything about even a single demand of the electricity workmen. All that it says is that even in respect of this it is awaiting Government orders. I must say something about this. Just before the formation of the Board, when we thought that these workmen were all Government servants, the Government said, 'The Board is about to be formed. We will see that the Board satisfies your demands in three months.' At that time, the workmen represented to the Government that if the Board

was formed, it would say, 'We have just come into existence.' It was represented that the Board might delay the proceedings. But the Government said, 'No, no. We will see that your demands are satisfied within three months.' But what was the result? After four months, the Board has rejected the demands. On what ground has it rejected them? On no grounds whatsoever. If what is considered as not unreasonable could not be settled, at least this dispute might be referred to a tribunal. Why I am saying this is this. The Government speak about a socialistic pattern. Is this the socialistic pattern that they are advocating? When workmen in the public sector, some 10,000 workmen are getting Rs. 32·80, most others are getting not more than Rs. 48 as total emoluments. As far as the electricity workmen are concerned, all that they advocate is a 'lip' pattern and not the socialistic pattern. This is the most important thing because electricity is one of the key industries on the basis of which all the other industries can thrive. In spite of its being a key industry and in spite of the importance of the work involved, nothing has been done so far for ten years.

There is another factor. It is not as though the Electricity Department has not been making enormous profits. Since 1948, the Electricity Department has been making, on an average, a profit of more than Rs. 5 to 6 crores. But that amount, instead of being spent for the amelioration of the conditions of the workers or for reducing the charges on the consumers of electricity, has gone into the general revenues. To-day what has happened? The Electricity Board says in its annual financial statement that all the money that has been spent as capital expenditure amounting to Rs. 70 crores has been treated as the capital of the Electricity Board. What does this mean? There is no credit for all this profit of about Rs. 5 crores or Rs. 6 crores. The entire amount of Rs. 70 crores is treated as a loan from the Government to the State Electricity Board. What is the rate of interest? The Government get loans from the Central Government or other sources at 3 per cent or 4 per cent. But the Board is charged $5\frac{1}{4}$ per cent interest. On that account, the Board has to show Rs. 4·1 crores as the interest payable to the Government. Why has the Board allowed the Rs. 70 crores to be made the capital? It can be explained only on the ground that though the Board is supposed to be an autonomous body, it cannot to-day function as an autonomous body because all the members of the Board are to-day Government servants who are more concerned with Government interest than with the interest of the Board or its workmen. Sir, what I am saying is that the Government have got some duty to do. Even in the Constitution, they say, there are certain directive principles. These are not something to be advocated to others. The case with regard to the workmen under the Electricity Board is the same as that of Non-
3-50 p.m. Gazetted Officers because the clerks in the Electricity Department to-day are getting total emoluments of Rs. 85 whereas, as I said earlier, a worker in the Buckingham and Carnatic Mills is getting much more than that. Therefore, I appeal, Sir, to the Government

7th March 1958] [Sri V. Gurunandan Row]

that immediately the conciliation report is received, it may be referred to a Tribunal so that some justice may be done to the workmen.

* Sri A. M. ALLAPICHAI : Mr. Chairman, Sir, I wish to speak on one or two points within the ten minutes allotted to me. There has been a lot of discussion on the question of the levy of income-tax on agriculturists. The impression created here by the Members on the other side is that the Congress Party and the Congress Government are determined to destroy this class of people. It is a very wrong thing to do and I do not know whether, knowingly or unknowingly, such a serious allegation is made by very responsible Members on the other side. As I have always been saying on the floor of this House, the Congress Party is following a middle course. It is not an extremist Party. If the Communist Party had been in charge of the administration of this big country, by this time many changes would have taken place. On the other hand, the Congress Party does not wish to take away what justifiably belongs to any section of the people in the country. But our friends on the other side do not see the writing on the wall. They seem to be living either in the twelfth or fifteenth century. They do not seem to be living in the Sputnik age. They do not seem to be seeing what is going on in the countries of the world. They do not seem to realise that it is not possible for us to-day to exploit the ignorance or poverty of our people. Sir, the Government do not want to take away all their income. What they say is, " If you get more than Rs. 3,000 you give a certain portion to the Government " and the Government are not eating it themselves. That amount is utilized for the benefit of our people. I do not understand why our friends are so much opposed to this. Sir, there is a saying in Urdu, the literal translation of which is : " Where has the ghee gone? " The reply is, " It has gone into the kichidi ". When something is taken from one section of our people who are well-to-do, it causes some difficulties or inconveniences to them. We have to give something to one who does not have anything, who does not even have one square meal everyday. Sir, the independence which we got on the 15th of August 1947 will be a mockery, nothing but mockery, if millions of our people were to starve. Even in spite of our independence, in spite of so many things which we talk about, and in spite of the goal of a socialistic pattern of society, even to-day millions of our people are starving. Is it not the duty of a responsible, sensible, good Government to see that everyone in the country gets justice? When the Government come forward to tax, people say that they are not rich. As a matter of fact, our people are poor. But what can we do when there are the poorest people in the country? If you do not realise this, what will happen? You may blame the Congress Government and you may kick out the Congress Government. But the result will be—what shall I say—some people will say, " We feel sorry that the Congress has gone out of power."

I was a bit depressed when I heard the speech of a very eminent Member of this House, Sri P. T. Rajan. Sir, I have

[Sri A. M. Allapichai] [7th March 1958

very great respect for him. He is a big man, a good man. He has in him some of the best traditions of our country. When I say "of our country", I do not mean "Tamil Nad". I say "of our country" which means "of India". When he was talking on the subject of Tamil Nad, I was really getting depressed because I felt—and even now feel—that it was not good to talk of separation. Is it possible, Sir, for Hyderabad, for Kerala or for any other part of India to be independent? The aim of this country and the good objective of great philosophers is that the whole world should come together. As a matter of fact, what is the object of the U.N.O.? If the U.N.O. does not carry out its functions in the way it ought to, then its very purpose will be defeated. But its aim is to bring the whole world closer. Therefore, when Russia is trying to come closer to America, when America wants to come closer to Japan, Japan wants to come closer to China and China wants to come closer to other countries, what is the meaning of a discordant note struck here in this House about Tamil Nad? What has happened to Tamil Nad? Sir, I do not believe in the be the most unfortunate day. I know that the Tamilians are very sensible people, very sane people. They know where their interests lie. They will never separate from the rest of India and except perhaps for political purposes—it may be a slogan—they do not need it. Other people know it. Sir, I think my time is up.

SRI P. T. RAJAN: Sir, the hon. the Deputy Chairman has not understood correctly what I said. He cannot accuse me that I am all for separation.

* SRI A. M. ALLAPICHAI: If he is not for separation, I withdraw all that I said. What I wish to emphasise is that whatever may be the shortcomings, we, Tamilians, are as good and as great as any other people in the world.

SRI P. T. RAJAN: Sir, with your permission, I would like to say this. I was only discussing it on an academic basis. But let me say that things are taking a turn when, whether you like it or not, each State might be compelled to fend for itself.

THE HON. SRI R. VENKATARAMAN: May we congratulate the Deputy Chairman on having kept his word? (Laughter.)

4 p.m. * SRI M. S. SUBRAMANIA KARAYALAR: கனம் தலைவர் அவர்களே, இந்த நிதி நிலை அறிக்கை மிகவும் மெச்சத்தக்கதாக அமைந்திருக்கிறது. நான் இந்த வரவு செலவுத் திட்டத்தை வரவேற்கிறேன். இந்த வரவு செலவுத் திட்டத்தில் அரசாங்கத்தார் இரண்டு வரிகளைக் கூட்டியுள்ளனர். இந்த இரண்டு வரிகளாலும் பொதுமக்கள் அதிகமாகப் பாதிக்கப்பட மாட்டார்கள். விவசாய வருமான வரி போடப்பட்டிருக்கிறது. இந்த வரி இப்போது கன்னியாகுமரி, செங்கோட்டை ஆகிய பகுதிகளில் அமுலில் இருந்து வருகிறது. இந்த வரியினால் பொதுமக்கள் படும் கஷ்டத்தைச் சற்றுச் சொல்ல விரும்புகிறேன். ரூ. 3,000-க்கு மேற்பட்டு வருமானம் பெறுபவர்களுக்குத்தான் விவசாய வருமான வரி விதிக்கப்படும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால், இப்போது இந்த வரி அமுலில் உள்ள பகுதிகளில், வருமான வரி அதிகாரிகள் வரியைக்

7th March 1958] [Sri M. S. Subramania Karayalar]

கேட்கும் நோட்டீஸை அனுப்பும்போது எல்லோருக்குமே அனுப்பிவிடுகிறார்கள். கனம் நண்பர் ஸ்ரீ மன்றாடியார் கூறியதுபோல், எல்லா விவசாயிகளும் கணக்கு வைத்துக்கொள்வதற்கு வாய்ப்பில்லை. எல்லா விவசாயிகளும் கணக்கு வைத்துக்கொள்ளுவதில்லை. விவசாயிகள் ஏதாவது கணக்குகள் வைத்துக்கொண்டிருந்தாலும், அவைகளைப் பரிசோதிக்கும் அதிகாரிகள் விவசாயிகளிடம் பல குறுக்குக் கேள்விகளைப் போடுகிறார்கள். உதாரணமாக, விவசாயக் காரியங்களுக்காக இரண்டு மாடுகள் வாங்கப்பட்டதாகக் கணக்கு எழுதப்பட்டிருக்கும். 'இப்பொழுது இரண்டு மாடுகள் வாங்கியிருக்கிறாயா, பழைய மாடுகள் என்ன ஆயிற்று' என்று கேட்கிறார்கள். பழைய மாடுகள் செத்துவிட்டன என்று சொன்னால், அதைப்பற்றி ஒன்றும் கணக்கிலே காணவில்லையே என்று கேட்கிறார்கள். செத்த மாட்டை எப்படிக் கணக்கில் காட்ட முடியும்? அது இறந்து போய்விட்டது என்று சொன்னால், 'அதனுடைய தோல் என்ன ஆயிற்று, அதை விற்றதற்குக் கணக்கு வைத்திருக்கிறாயா?' என்று கேட்கிறார்கள். 'நஞ்சை வரப்புகளில் இருக்கும் புல்லை என்ன செய்தீர்கள், அதற்குக் கணக்கு எழுதியிருக்கிறாயா,' என்று கேட்கிறார்கள். மாட்டுக்கு வேண்டி அறுத்துப் போட்டோம் என்று சொன்னால், அந்தப் புல்லுக்கு என்ன கிரயம் இருக்கும், அந்தக் கிரயத்தைக் கணக்கில் காட்டியிருக்கிறாயா என்று கேட்கிறார்கள். இதையெல்லாம் எப்படிக் கணக்கில் காட்டுவது ? எங்கள் நாட்டில் வளரும் சோளத்தட்டையை மாட்டிற்குப் போடுவதில்லை. அதை எரித்துச் சாம்பலாக்கி உரமாக்கி விடுவோம். புஞ்சைக் காட்டிற்கு அந்த உரம் உபயோகப்படுகிறது. சோளத்தட்டையை என்ன செய்தாய் என்று கேட்கிறார்கள். அதற்கு வண்டி வாடகை கூடக் கிடையாது, அதை அப்படியே எரித்துச் சாம்பலாக்கி உரமாக உபயோகப்படுத்தியதாகச் சொன்னால், அந்த உரத்திற்கு ஒரு விலை போட்டு ஏன் அதைக் கணக்கில் வைக்கவில்லை என்று கேட்கிறார்கள். இம்மாதிரி எவ்வளவோ துன்பங்கள் இருக்கின்றன. அந்த விவரங்களையெல்லாம் எடுத்துச் சொல்ல வேண்டுமானால், ரொம்ப நேரம் பிடிக்கும். கடைசியிலே என்ன சொல்லுகிறார்கள் என்றால், 'உங்கள் கணக்கை நான் நம்பவில்லை, உங்களுக்கு ரூ. 5,000 வருமானம் இருக்கிறது என்று நான் சொல்லுகிறேன், அதற்கு நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்' என்று கேட்கிறார்கள். "எங்கள் கணக்குப்படி ரூ. 1,500 தான் வருமானம் இருக்கிறது" என்று சொன்னால், அந்தக் கணக்கை நம்ப முடியாது, ரூ. 5,000 வருமானம் என்று வைத்துக் கொண்டு அதன்பேரில் வரி கொடுக்க வேண்டுமென்று சொல்லிவிடுகிறார்கள். அப்பீல் செய்யலாம் என்றாலும், இதில் வரக்கூடிய வருமானத்தைவிட அப்பீல் செய்வதற்கு அதிகமாகச் செலவு ஆகிவிடும். அதனாலே, எல்லோரும் அதிகாரிகள் விதிக்கும் வரியைக் கொடுத்து விடுகிறோம். ஏனென்றால் அப்பீல் செய்வதாயிருந்தால், அதற்கு வேறு வக்கீல் 'பீஸ்' முதலியவை கொடுக்க வேண்டும். இந்த வரிகளை அமுலுக்குக் கொண்டு வரும்பொழுது, இம்மாதிரிச் சங்கடங்கள் ஏற்படாமல் மக்களைக் காப்பாற்ற வேண்டியது சர்க்காரின் கடமை என்பதைச் சொல்லிக்கொள்ளுகிறேன்.

நமது சென்னை ராஜ்யத்திலே போதுமான வனம் இல்லை என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். வனத்தை நாம் எவ்வளவு நல்ல முறையிலே பயன்படுத்த வேண்டுமோ அந்த முறையிலே பயன்படுத்த வேண்டும். வனத்தை எடுத்துக்கொண்டால் வனத்திலே 400, 500 ஜாதி மரங்கள் இருக்கின்றன. அந்த மரங்களில் சுமார் 10, 15 ஜாதி மரங்களைத் தான் நாம் உபயோகப்படுத்துகிறோம். மற்ற மரங்களையெல்லாம் பாழ் மரம் என்று தள்ளிவிடுகிறோம். பாழ் மரத்தை 'ஆஸ்கியூ ட்ரீட்மெண்டு' செய்து நாம் உபயோகிப்பதாக இருந்தால், தேக்கு மரம் போல் எல்லா பாழ் மரங்களையும் உபயோகப்படுத்தலாம். ஆங்காங்கு ரிஸெர்ச் ஸ்டேஷன் அமைத்து பாழ் மரங்களை உபயோகப்படுத்துவதற்கு வேண்டிய ஆராய்ச்சி செய்ய வேண்டும். அம்மாதிரி ஆராய்ச்சி செய்து அந்தப் பாழ்மரங்கள் பொது மக்களுக்கு உபயோகப்படும்படி செய்ய வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்ளுகிறேன். 4-10 p.m.

அடுத்தபடியாக, நமது இந்தியா தேசத்திலே போதுமான ரப்பர் இல்லை என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். ரப்பரை வெளி நாடுகளி

லிருந்து இறக்குமதி செய்கிறோம். நம்முடைய நாட்டிற்கு வேண்டிய ரப்பரை இங்கேயே உற்பத்தி செய்வதற்கு மத்திய சர்க்கார் பண உதவி செய்வதாகத் தெரிகிறது. இப்பொழுது எங்கள் செங்கோட்டைத் தாலூகாவை எடுத்துக்கொண்டால், சுமார் 5,000 ஏக்கர் வரையிலும் பட்டா நிலங்கள் இருக்கின்றன. அது ரப்பர் உற்பத்தி செய்வதற்கு உகந்த நிலமாக இருக்கிறது. அந்த நிலங்களின் பட்டாதார்களுக்கு மத்திய சர்க்கார் கொடுக்கக்கூடிய உதவியை நம்முடைய சர்க்கார் வாங்கிக் கொடுக்க வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன். செங்கோட்டைத் தாலூகாவில் இருந்த ஏராளமான ரப்பர், தேயிலைத் தோட்டங்கள் இப்பொழுது கேரள நாட்டிற்குப் போய்விட்டன.

SRI V. V. RAMASWAMI : மனுப் போடுங்கள்.

* SRI M. S. SUBRAMANIA KARAYALAR : மனுக்களும் போட்டிருக்கிறோம். இருந்தாலும் சபையில் இதுபற்றிச் சொல்ல வேண்டுமென்று எல்லோரும் சொன்னதினால் இங்கு சொல்லுகிறேன்.

அடுத்தபடியாக, டாக்டர் லோகநாதன் அவர்கள் விற்பனை வரி சம்பந்தமாக ஒரு அறிக்கையை விடுத்திருக்கிறார்கள். அதில் தீப்பெட்டியை 'லக்ஸரி குட்ஸ்' என்று சொல்லியிருக்கிறார். ஐந்து சதமானம் வரையில் அதற்கு வரி விதிக்க வேண்டுமென்று சிபார்சு செய்திருக்கிறார். சிகரெட், பீடி குடிப்பவர்கள்தான் தீப்பெட்டியை அதிகமாக உபயோகப்படுத்துகிறார்கள் என்ற எண்ணத்தில் அதை 'லக்ஸரி குட்ஸ்' என்று சொல்லியிருப்பார்கள் என்று நான் நினைக்கிறேன். ஆனால் தீப்பெட்டி ஒவ்வொரு வீட்டிற்கும் வேண்டிய அவசியமான ஒரு பொருள் என்பது நம் எல்லோருக்கும் தெரிந்த விஷயம். தீப்பெட்டி இல்லாவிட்டால் காலையிலே காப்பி கூடக் குடிக்க முடியாது. முதலிலே காலையில் வீட்டில் அடுப்புப் பற்ற வைத்தால்தான் மற்றக் காரியங்களை நாம் நடத்த முடியும். ஆகவே, தீப்பெட்டி ரொம்ப அத்தியாவசியமான பொருள். ஆதலால், அதை 'லக்ஸரி குட்ஸ்' என்று சொல்லக் கூடாது. இந்த ரிப்போர்ட்டை அரசாங்கம் பரிசீலனை செய்யும்பொழுது, இதுபற்றி கவனிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

* SRI T. DEVARAJA MUDALIAR : கனம் சபைத் தலைவர் அவர்களே, அன்பும், அறிவும் ஆற்றலும் படைத்த நிதி அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக்கக்கூடிய வரவு செலவுத் திட்டத்தை நான் முழு மனதுடன் ஆதரித்துப் பேசுகிறேன். அன்பு உள்ளம் படைத்தவர்களுக்கு ஆறு குணங்கள் உண்டு. ஈதல், பொருள் கொடுத்தல், இன்சொல் புணரவைத்தல், ஏதல், பிரியேல், கவரேல் என்ற ஆறு குணங்களும் இந்த வரவு செலவுத் திட்டத்தில் ஒருங்கே அமைந்திருக்கின்றன என்று சொன்னால், அது மிகையாகாது. இந்த வரவு செலவுத் திட்டத்தில் மின்சார முன்னேற்றம் அதிகமாகக் காணப்படுகிறது என்பதை யாரும் மறுக்க முடியாது. மின்சாரம் நல்ல முன்னேற்றம் அடைந்திருக்கிறது என்பதை எடுத்துச் சொல்ல ஆசைப்படுகிறேன். சூரியன், சந்திரன், காற்று இம்மூன்றும் எப்படி இரவு பகல் உரக்கமின்றி பணி செய்கின்றனவோ, அதேமாதிரி மின்சாரம் இரவு பகலாக ஓடிக்கொண்டு பணி செய்து கொண்டு வருகிறது என்று சொல்லுவதும் மிகையாகாது.

(Deputy Chairman in the Chair.)

உணவு உற்பத்தியை அதிகரிப்பதற்கு எல்லோரும் ஒத்துழைக்க வேண்டும். அதற்காக அரசாங்கம் பலவிதமான வசதிகளைச் செய்து கொடுத்திருக்கிறது. அந்தத் திட்டங்களுக்கு இந்த வரவு செலவுத் திட்டத்தில் பணம் ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கிறது. எல்லாம் இருந்தும் சாப்பாட்டிற்கு உப்பு இல்லை என்றால் எப்படி இருக்கும்? அதே மாதிரித்தான் விவசாய முன்னேற்றத்திற்கு இவ்வளவு திட்டங்கள் போடப்பட்டிருந்தும், இவ்வளவு பணம் ஒதுக்கப்பட்டிருந்தும், மின்சாரம் 25 சத விகிதம் 'கட்' என்று சொன்னால், உணவு உற்பத்தி விஷயத்தில் முன்னேற்றத்திற்கு வசதி இல்லாமல் போய்விடுகிறது. இரவில் தண்ணீர் பாய்ச்சுவதில் பல கஷ்டங்கள் இருக்கின்றன. அந்த வசதியை இரவில் பூராவும் உபயோகப்படுத்த முடியாத

7th March 1958] [Sri T. Devaraja Mudaliar]

நிலையில் இருக்கிறார்கள். ஆகையால், சர்க்கார் விவசாயத்திற்கு மாத்திரம் மின்சார 'கட்' இல்லாமல் செய்து ஆதரவு கொடுக்க வேண்டும். அப்படியில்லாமல், மின்சாரத்தைக் குறைத்துவிட்டால் விவசாயத்தில் முன்னேற்றம் காண முடியாது. விவசாயிகள் பம்புசெட்டுகள் வைத்திருக்கிறார்கள். பம்புசெட்டுகளுக்குச் செலவாகும் மின்சாரத்திற்கான கட்டணத்தை இப்போது விவசாயி அதிகம் கட்ட வேண்டியிருக்கிறது. ஒரு குதிரை ஓட்ட மின்சார பம்புசெட்டிற்கு வருஷத்திற்கு ரூ. 50 வீதம் ஐந்து குதிரை வேகத்திற்கு ரூ. 250 கட்டணம் செலுத்த வேண்டியிருக்கிறது; ஸர்சார்ஜையும் சேர்த்து ரூ. 300-ஐ மின்சார போர்டார் வாங்கி விடுகிறார்கள். மழை காலங்களில் விவசாயி பம்பு ஸெட்டை உபயோகிப்பதில்லை. ஆனால் அந்தக் காலத்திற்கும் அதே தொகையை மின்சார போர்டார் வாங்கிவிடுகிறார்கள். அந்தக் காலத்திற்காவது மின்சாரக் கட்டணத்தைக் குறைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். விவசாயிகளுக்கு உற்சாகமேற்படும்படி செய்தால்தான் விவசாயம் அபிவிருத்தியடையும்.

மேலும், இப்போது அரசாங்கத்தார் டீஸல் எண்ணெய்க்கு வரி போட்டிருக்கிறார்கள். இப்போது விவசாயிகள் டீஸல் எஞ்சின்களை விவசாயக் காரியங்களுக்கு உபயோகப்படுத்தி வருகிறார்கள். அவர்கள் நிறைய டீஸல் எண்ணெயைச் செலவழிக்கிறார்கள். நான் நாள் ஒன்றிற்கு 200 காலன் டீசல் எண்ணெயைச் செலவழிக்கிறேன். ஒரு நாளைக்கு 50 ரூபாய் டீசல் எண்ணெயில் நஷ்டமேற்படுகிறது. எனக்கு நஷ்டமாயினும் சரி, விவசாயிகளுக்கு இந்த வரியை எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அப்படிச் செய்தால்தான் விவசாயிகள் உற்சாகத்துடன் உணவுப் பொருள் உற்பத்தியைப் பெருக்குவார்கள். இப்போது நாட்டுக்கு நல்ல காலம் வந்திருக்கிறது. இந்தியா தேசம் ஜனநாயகக் குடியரசாகி எட்டு வருஷங்கள் ஆகிவிட்டன. இப்போது ஒன்பதாவது வருஷத்திற்குப் போய்க்கொண்டிருக்கிறோம். ஒன்பதில் போனால் உச்சம் என்று சொல்லுவார்கள். ஒன்பதின் மகாத்மியத்தைச் சொல்லி முடியாது. மனிதருக்கு இருப்பது நவத் துவாரங்கள். தானியங்கள் ஒன்பது. ரத்தினங்கள் ஒன்பது. கிரகங்கள் ஒன்பது. மாபெரும் தலைவர் ராஜாஜி மவுண்ட்பேட்டனிடமிருந்து கவர்னர் ஜெனரல் பதவியை 9-ம் படியில் இருந்துகொண்டுதான் ஏற்றுக்கொண்டார். ராஷ்டிரபதி ராஜேந்திரப் பிரசாத் பதவியேற்றுக்கொண்டபோது நான் சமீபத்தில் காலஞ் சென்ற ஜனாப் உபயதுல்லாவுடன் டெல்லியில் இருந்தேன். அப்போது அவர் ஊர்வலமாக வந்தார். அவர் இருந்த ரதத்தில் பூட்டியிருந்த குதிரைகள் ஒன்பது. அவர் ரதத்திற்கு மேல் ஆகாயத்தில் பறந்த விமானங்கள் ஒன்பது. மேலும் 9-ஐ அந்த எண்ணால் பெருக்கி வரும் விடையில் 9 இருக்கும்; அல்லது அந்த விடையிலுள்ள எண்களைக் கூட்டினால் 9 வரும். $2 \times 9 = 18$; $1 + 8 = 9$. $3 \times 9 = 27$; $2 + 7 = 9$; $4 \times 9 = 36$; $6 + 3 = 9$. $12 \times 9 = 108$. இன்னொன்று சொல்ல விரும்புகிறேன். ராவணன் தன் பிள்ளை இந்திரஜித் உலகத்தில் சாகாவரம் வாங்கவேண்டுமென்பதற்காக நவக்கிரகங்களையெல்லாம் வைத்து பூஜை செய்துகொண்டிருந்தான். அப்போது அங்கே நாரதர் வந்தார். விஷயத்தை அறிந்தார். உடனே இவன் வெற்றியடையக் கூடாது என்பதற்காக அவர் "சனி பார்த்தால் உன் பிள்ளைக்கு ஆபத்து" என்று இராவணனிடம் சொல்லிவிட்டு, சனி பகவானை வேறு பக்கமாகத் திருப்பி வைத்துவிட்டார். அதனால்தான் நவக்கிரகங்களுள் சனி எங்கேயோ பார்த்துக்கொண்டிருக்கும். ஒவ்வொரு திக்கையும் இரண்டு நவக் கிரகங்கள் பார்த்துக் கொண்டிருக்கும். சனி மட்டும் தனியாக எங்கேயோ பார்த்துக்கொண்டிருக்கும். மகாத்மியம் வாய்ந்த ஒன்பதாவது ஆண்டுக்கு நாம் போய்க்கொண்டிருக்கிறோம். ஆகவே, கீழ் சபை உறுப்பினர்களும் மேல்சபை உறுப்பினர்களும் ராஜ்யத்திலுள்ள பொதுமக்களும் அரசாங்கத்திற்கு முழு ஒத்துழைப்பைக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். ஒற்றுமை உண்டு வாழலாம் என்னும் கருத்துக்கிணங்க, அனைவரின் ஒத்துழைப்பையும் நாடுகிறேன். மிகுதி இருக்கும் பட்ஜெட் தொகையைக் கொண்டு என்.ஜி.ஓ-க்களுக்கும் ஆசிரியர்களுக்கும், மணியக்காரர், கணக்குப்பிள்ளை, தலையாரி ஆகியோர்களுக்கும், சம்பள உயர்வு கொடுக்க வேண்டும் என்று அமைச்சர் குழுவை பணிவன்புடன் கேட்டுக்

கொள்கிறேன். என் சொற்பொழிவில் தவறுகள் இருந்தால் சபையினர் மன்னிக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு என் பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

* Dr. T. V. SIVANANDAM: Mr. Deputy Chairman, I welcome the Budget proposals as put forward by the Finance Minister. It is really a step forward, as it aims at the establishment of a socialistic pattern of society. There are some objjections to the imposition of agricultural income-tax. I do not think that this agricultural income-tax will affect most of these small landowners, because when the net income is arrived at, after deduction of the amount spent on agricultural operations, the kist and the cess, there will not be much left for the assessment of this tax. But what we fear is that in the calculation of this tax, there will be a good deal of hardship to be met with by the landowners. We may say that it should not take place. Take, for example, the sales tax. Every merchant is prepared to pay the sales tax. But he does not like the hardship caused to him by the sales tax officers. This is the only thing that troubles the assessees. I request the Government to see that in the matter of collection and assessment of this income-tax, the officers are polite and sympathetic towards the agriculturists. Otherwise, when these officers assess a certain amount, it will be very difficult for the landowners to go and fight and say that the assessment is wrong.

4-20 p.m. Secondly, it will create more problems. We have already got problems after problems to solve. This will add to them. We must see that the agriculturists are not put to any hardship in the matter of collection of taxes.

As regards the tax on diesel oil, I do welcome it because it will only affect those fleet-owners and lorry-owners who are minting money. Many hon. Members have pointed out that agriculturists will suffer on account of this levy. It is up to the Government to see that they are not put to any sort of hardship. The Leader of the Opposition yesterday brought to our notice that the price of diesel oil in border areas was far less than in our State and that there would be a lot of blackmarketing and evasion of tax. The Government must open their eyes and see that such a thing does not take place. In this connexion, I would like to bring to the notice of the Government that lorries are plying in the night at reckless speed. This must be controlled and stopped. Otherwise, the accidents will increase in number.

As regards the entertainment tax, it is noted that Sangeetha Sabhas, music performances, dance performances and dramas would be exempt from it. This is really a welcome one.

During the last Budget session I brought to the notice of the Government that there were a large number of cases pending disposal in the High Court and pleaded that the number of Judges should be increased. While I hear that in the Patna and Calcutta High Courts and others, there are four temporary Judges appointed for disposing of long pending cases, in our State, we have appointed only two temporary Judges. It was decided at the last Conference

7th March 1958] [Dr. T. V. Sivanandam]

of Law Ministers that cases pending since 1952, 1953 and 1954 should be disposed of before 1958. We should not lag behind other States in the disposal of cases. We must have two more Judges so that the work could be finished soon. In this connexion, I would request that in the matter of recruitment of High Court Judges, a chance may be given to persons belonging to backward communities. If they possess equal merit and qualification, a person from a backward community may be preferred.

Sir, at the last meeting of the Council, I brought to the notice of the Minister for Co-operation that political parties interfered with the day-to-day affairs of co-operative societies and said that it must be stopped. The co-operative movement has survived these 54 years due to the selfless work of non-officials and has done a very good piece of work. It has now become a fashion for political parties to interfere with the working of co-operatives also. Having been associated with the movement for the past 25 years, let me warn the Government that the interference of political parties will be very dangerous. Political parties should not interfere with the affairs of co-operative societies. Trade Unions also should not interfere with the affairs of the co-operative employees' unions. Then only this movement will survive and will continue to do better work.

Regarding Public Health and Medicine, it has been said, there is a dearth of medical men. I do not know whether the Government have made a survey of the number of doctors who are available in the State now. It is a fact that now most of the doctors do not choose Government service. Formerly, Government service was considered a coveted one. The cost of living was not much then. Nowadays, nobody likes Government service. We must offer adequate remuneration and attract doctors to Government service. The honorary system should be enlarged and more pay and allowances should be given to service doctors. If more pay is given, then the doctors will be prevented from having private practice. It is only in this way that you can solve the problem of dearth of doctors.

Sir, to-day the duties of the District Medical Officers have increased manifold. Since they have a lot of administrative work to do, they are unable to attend to professional work. Also, they have to attend to all sorts of enquiries from the Government from time to time. If an anonymous letter is sent to the Minister, then it is referred to the District Medical Officer for enquiry and report. This is absolutely unnecessary. The District Medical Officer should have a Lay Secretary of the rank of a Deputy Collector who should attend to administrative work so that the medical officer may attend to professional work.

Sir, there is demand for more medical colleges in the State. We want medical men and not students with medical qualifications. Two colleges are contemplated in our State. I would like to point out that we should have sufficient non-clinical personnel and proper teachers to teach students. I am sorry to say that the standard of

[Dr. T. V. Sivanandam] [7th March 1958

medical education here is coming down. We should not rest content with our own qualifications. We must take men from other Universities also. We must send our men to foreign Universities and enable them to acquire further knowledge.

4-30 p.m. Unless they are in touch with modern surgery, medicine and midwifery and are up-to-date in their knowledge of these things, to coach the students efficiently, we cannot also expect medical men turned out of the colleges to be fully equipped with adequate knowledge of modern methods. I would, therefore, appeal to Government not to be in a hurry to produce boys and girls from out of these medical colleges who are only poorly equipped, because once they come out as doctors from these institutions, the life and health of the people of the country are entrusted to their care. They must utilise the opportunities offered to them to learn more. I understand that under the Colombo Plan, they can send at least twelve students to foreign countries, especially for the study of non-clinical subjects. These persons can go to foreign countries, learn more, and then come back and teach our students in the medical institutions. Only last week I learnt from our ex-Surgeon-General, Sri Mannady Nair, Additional Medical Adviser to the Government of India, that a lot of well-qualified non-clinical doctors were available. We can make use of their services through the Colombo Plan. Our Government must come forward to appoint well-qualified people to give proper education to our students in the medical colleges.

Lastly, I would request the Government to raise the pay of our doctors. They should not be allowed to have any sort of private practice. They should not also allow top people in the districts to spend most of their time on supervision and unnecessary administrative work. They should be relieved of this work by appointing Lay Secretaries in the cadre of Deputy Collectors to attend to them.

Thank you, Sir.

* SRI V. V. RAMASWAMI : கனம் துணைத் தலைவர் அவர்களே, என் சொந்த நன்மையை முன்னிட்டும், தலைவர் அவர்களுடைய அதிகாரத்தாலும், என்பால் உள்ள அன்பின் காரணமாகவும், கனம் தலைவர் அவர்கள் யான் பேசக் கூடாதென்று இன்றுவரை என்னைத் தடுத்துவிட்டார்கள். ஆயினும், வரவு செலவுத் திட்ட விவாதத்தின்போது கொஞ்ச நேரமாவது பேச வேண்டுமென்று நான் அவரைப் பெரிதும் கேட்டுக்கொண்டேன். நான் கேட்டுக்கொண்டதற்கு இணங்கி, நான் பேசுவதற்குக் கனம் தலைவர் அவர்கள் அனுமதித்திருக்கிறார்கள். ஆகையால், வரவு செலவுத் திட்டத்தின் பேரில், பிரிவுவாரியாகப் பேசாமல் பொதுவான சில கருத்துக்களை மட்டும் சொல்லி என் பேச்சை விரைவில் முடித்துக்கொள்ளவிருக்கிறேன்.

இந்த ஆண்டுத் தொடக்கத்திலிருந்து நம் தாய் மொழியாகிய தமிழ் மாநில ஆட்சி பீடத்தில் அமர்ந்திருப்பது குறித்து அகமகிழ்கின்றேன். இதற்காக ஆட்சியாளர்களைப் பெரிதும் பாராட்டுகிறேன். ஆயினும், நம் மாநிலத்திற்கு இன்னும் " தமிழ் நாடு " என்று பெயரிடப்படாமல் இருப்பது மிகவும் வருந்தத் தக்கது. என்று " தமிழ் நாடு " என்ற பெயர் நம் மாநிலத்திற்கு வைக்கப்படுகிறதோ, அன்றுதான் ஒவ்வொரு தமிழனும் மன நிறைவு கொள்வான். வழக்கத்திலுள்ள தூயச் சொல்லை நிலைநிறுத்துவதற்கு ஆட்சியாளர்களுக்குத் தயக்கமேன் ?

7th March 1958] [Sri V. V. Ramaswami]

நம் மாநிலத்தில் நெய்வேலி நிலக்கரித் திட்டம் பலனளிக்க ஆரம்பித்து விட்டது மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும். இதன் விளைவாக தொழில் வளம் பெருகும் என்றும் மக்களின் வாழ்க்கைத் தரம் உயரும் என்றும் நம்புகிறேன். இந்தத் திட்டத்தையொட்டி, அரசாங்கத்தார் ஒவ்வொரு மாவட்டத்திலும் ஒரு தொழில் நுட்பப் பள்ளியைத் திறப்பதற்கு முயற்சி செய்து வருவதைப் பாராட்டுகிறேன். தொழிற் பேட்டையில் (இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்) தொழிற்சாலை அமைப்புகளுக்கான வாடகை விகிதங்கள் அதிகமாக இருப்பதால், அங்கே வருவதற்கு தொழிலதிபர்கள் தயங்குகிறார்கள். ஆகவே, வாடகை விகிதங்களைப் போதிய அளவு குறைக்க வேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கிறேன்.

நெய்வேலித் திட்டத்திற்கு அடுத்தபடியாக தமிழகத்திற்கு வேண்டிய முக்கியமான திட்டம் சேதுசமுத்திரத் திட்டம். அது கைவிடப்பட்டதென்று கூறும் செய்தி மிகவும் கவலையையும் வேதனையையும் நமக்குத் தருகிறது. இத்திட்டத்திற்கு மதிப்பிடப்பட்ட செலவிற்கு வேண்டிய நிதி வசதி இல்லை என்று திட்டம் கைவிடப்பட்டதற்குக் காரணம் கூறப்படுகிறது. இத்திட்டம் தென்னகத்திற்கு முக்கியமாகத் தேவைப்படுகிறது என்பதையும் இது லாபகரமானது என்பதையும் உணரும்போது, திட்டம் கைவிடப்பட்டதற்குக் காரணம் நிதி வசதியின்மை என்பது உண்மையானது என்று என்னால் ஒப்புக்கொள்ள இயலவில்லை; வேறு ஏதோ உள்காரணம் இருக்குமோ என்று அஞ்சுகிறேன். எப்படி இருந்தபோதிலும், நமது அமைச்சரவையினர் விடாப்பிடியாக வலியுறுத்தி, இத்திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வருவதற்கு டில்லி அரசாங்கத்தை இணங்கச் செய்ய வேண்டும். தூத்துக்குடித் துறைமுகத்தை உயர்வுபடுத்துவதற்கு அரசாங்கத்தார் நடவடிக்கை எடுத்திருப்பது பாராட்டுதற்குரியது ஆகும். அந்தத் திட்டமும் விரைவில் நிறைவேற வேண்டுமென்று மக்கள் விரும்புகிறார்கள்.

எங்கள் ராமநாதபுரம் மாவட்டத்தில் கிழக்குப் பகுதியும் அதையொட்டியுள்ள திருநெல்வேலி பகுதியும் மிகவும் பின்தங்கிய பிரதேசங்கள். அங்கே போக்குவரத்து வசதிகள் மிகக் குறைவு. இப்போது அங்கே சில சாலைகள் போடுவதற்கு ஏற்பாடாகியிருக்கிறது. மானாமதுரையிலிருந்து முதுகுளத்தூர் வழியாகத் தூத்துக்குடிக்குச் செல்வதற்கான ரயில் பாதை ஒன்று அங்கே மிக மிக அவசியம். மத்திய அரசினர் இதற்கான திட்டத்தை விசேடமாகக் கருதி, அவசியமான தனித் தொகையை ஒதுக்கி உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டும். இதற்கான சர்வேயும் பல ஆண்டுகளுக்கு முன்பே எடுக்கப்பட்டிருக்கிறது என்று அறிகிறேன். இந்தப் புதிய ரயில் பாதையைப் போட்டால், அதற்குச் செலவாகக்கூடிய முதலீட்டுப் பணத்தின்பேரில் பதில் வருவாயாக என்ன சத விகிதம் பணம் கிடைக்கும் என்று கணக்குப் பார்ப்பது சரியல்ல. இந்த ரயில் பாதையைப் போடுவதன் மூலம், அங்கு வாழும் மக்கள் உலகத்தோடு தொள்வதற்கான வாய்ப்பை ஏற்படுத்திவிட்டால், அங்கு இப்போதுள்ள சமூகக் கேடுகள் நாளாவட்டத்தில் மறைந்துவிடும். மேலும், பிற அபிவிருத்தித் திட்டங்களை மேற்கொள்வதில் அங்குள்ள மக்களின் ஒத்துழைப்பை அரசாங்கம் நாடும்போது, திட்டச் செலவில் ஒரு பங்கை அவர்கள் கொடுக்க வேண்டுமென்ற நிபந்தனையை நீக்கிவிட வேண்டும். இல்லாவிட்டால், மக்களிடமிருந்து பணமும் வராது, திட்ட வேலையும் நடக்காது. இப்பிரதேசத்தைப் புனருத்தாரணம் செய்வதில் தனியான, விசேடமான கவனம் செலுத்தப்பட வேண்டுமென்று அழுத்தமாகக் கேட்டுக்கொள்கிறேன்.

தமிழகத்திலுள்ள பெரிய நீர்ப்பாசனத் திட்டங்கள் அனைத்தும் அனேகமாக நிறைவேற்றப்பட்டுவிட்டன என்று சொல்லப்படுகிறது. இனி சிறிய பாசனத் திட்டங்களில் அரசாங்கத்தார் கவனம் செலுத்துவதை வரவேற்கிறேன். இத்திட்டங்களுக்காக 'ஸ்பெஷல் டிவிஷன்' ஒன்றை அமைக்கப் போவதாகக் கனம் மராமத்து அமைச்சர் கூறியிருப்பதாகத் தெரிகிறது. அதை அமைக்கும்போது, எங்கள் மாவட்டத்தில் உள்ள நிலைமையையும் சர்க்கார் கவனிக்க வேண்டுமென்று விரும்புகிறேன். அந்தந்தப் பிரதேசத்திலுள்ள விவசாயிகளைக் கேட்டால், 'எந்தெந்த ஏரிகளும் குளங்களும் முதலில் கவனிக்கப்பட வேண்டும் என்பதைப்பற்றியும்' எந்த எந்தச் சிற்றாறுகள், ஓடைகள் முதலியவைகளில் சிறு சிறு நீர்த்

[Sri V. V. Ramaswami] [7th March 1958

தேக்கங்களைக் கட்டினால், அவைகளில் தண்ணீர் தேங்குவதுடன் அவைகளுக்குப் பக்கத்திலுள்ள கண்மாய்களிலும் கிணறுகளிலும் தண்ணீர் பெருகும் என்பதைப்பற்றியும் அவர்களுடைய அனுபவத்தின் காரணமாக நன்றாக ஆலோசனை சொல்வார்கள். மக்களால் தொன்று தொட்டு பெறப்பட்டிருக்கும் அனுபவத்தை அரசாங்கத்தார் அலட்சியப்படுத்தாமல் அதைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டுமென்று எச்சரிக்க விரும்புகிறேன், எங்கள் சாத்தூர் தாலூகாவில் உள்ள வைப்பாற்றிலும் அணை கட்ட வேண்டுமென்ற கோரிக்கை இருந்து வருகிறது. அதுவும் ஆராயப்பட வேண்டும். மேலும் பெரிய திட்டங்கள் என்ற நினைவு வரும்பொழுது, பரம்பிக்குளத் திட்டம் உருவாகும் என்பது தெரிந்து பூரிப்பு உண்டாகிறது. அதே சமயத்தில் எங்கள் ராமநாதபுரம் மாவட்டத்திற்குப் பயன் அளிக்கக்கூடிய பெரிய ஆறுகள் இன்னும் மேற்கே போய்க்கொண்டிருக்கின்றன. அதைப்பற்றி ஒரு பேச்சும் காணோம், அது மிகவும் வருந்த வேண்டிய நிலைமையை உண்டாக்கியிருக்கிறது. அது சம்பந்தமாக கனம் அமைச்சர் அவர்கள் விளக்கம் தரவேண்டுமென்று விழைகின்றேன்.

உணவு நிலைமையைப்பற்றி விவசாய அமைச்சர் கூறியபோது, 'அரிசி தட்டுப்பாடு இல்லை, கவலைப்பட வேண்டிய நிலையில்லை' என்று குறிப்பிட்டிருக்கிறார். அதற்காக என் மகிழ்ச்சியைத் தெரிவித்துக்கொள்கிறேன். ஓமந்தூரார் அவர்கள் புள்ளிவிவரக் கணக்கு சரியில்லை என்று ஐயப்பட்டார்கள். எப்படியிருந்தாலும், டில்லியில் உணவுத் துறை அமைச்சர்கள் முன்பின் யோசியாமல் உணவு நிலைமையைப்பற்றிப் பலவாறு கூறி மக்களிடத்திலே பீதியை உண்டாக்கிவிட்டார்கள். இந்தப் பிதற்றலை அடக்கவாவது நமது அமைச்சர் அவர்களின் தெளிவுரை பயன்படும் என்பதற்காக மகிழ்ச்சி அடைகிறேன் என்று மீண்டும் நான் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஸ்தல ஸ்தாபனங்கள் திருத்த அமைப்புத் திட்டத்தை ஒரு குழுவினர் ஆராய்ந்துகொண்டிருக்கின்றனர். அதுவும் சீக்கிரம் முடிந்து நல்லதோர் சட்டம் கொண்டுவரப்படும் என்று எதிர்பார்க்கிறேன். இதில் அமைச்சர் அவர்களின் முயற்சியைப் பாராட்டுகிறேன். 'டெவெலப்மெண்டு கவுன்சில்' களைப்பற்றிப் பேசும்போது, எங்கள் மாவட்டத்தில் விருதுநகரில் ஒரு 'டெவெலப்மெண்டு கவுன்சில்' ஏற்படுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதேமாதிரி எங்கள் ஜில்லாவை இரண்டாகப் பிரிக்கும்பொழுது, ஒரு மாவட்டத்திற்கு விருதுநகர் தலைநகரமாக இருக்கவேண்டும் என்று இந்த சந்தர்ப்பத்திலே சொல்லிக்கொள்கிறேன்.

விற்பனை வரி சம்பந்தமாக டாக்டர் லோகநாதன் அவர்கள் மிகவும் சிரமப்பட்டு எதிர்பாராத நல்ல சிபார்சுகளைச் செய்திருக்கிறார். அவர் உழைப்பிற்கு நம் பாராட்டுதலைத் தெரிவித்துக்கொள்ளவேண்டும். இந்த அறிக்கையின்மீது எல்லோருக்கும் திருப்தி அளிக்கும் வண்ணம் நல்ல சட்டம் கொண்டுவருவதற்கு அமைச்சர் அவர்கள் செய்யும் முயற்சி வெற்றி பெறும் என்று நம்புகிறேன்.

கைத்தறி நெசவாளர்களின் துயரத்தைப் போக்க நமது அமைச்சர் எடுத்துவரும் உறுதியான போக்குக்கு நாம் நன்றி செலுத்த வேண்டும். வட நாட்டில் உற்பத்தியாகின்ற மில் துணி விலை அதிகமாக இருப்பதால் அது விற்பனையாகாமல் தேங்கிவிடக் கூடாது என்பதற்காக, அதன்மீது விதிக்கப்பட்டிருந்த கலால் வரியைக் குறைத்தார்கள். அதே சமயத்தில், நமது மாநிலத்திலே அதிகமாக உற்பத்தியாகி விற்பனையாகாமல் தேங்கியிருக்கும் கைத்தறித் துணிக்குக் கொடுத்த ரிபேட்டைக் குறைத்துவிட்டார்கள். இது டெல்லி அரசாங்கம் வடநாட்டாரோடு சேர்ந்துகொண்டு செய்த சூழ்ச்சியாக இருக்கும்போல் தெரிகிறது. ஆகவே, நமது அமைச்சர்களாகிய வேங்கடமோ, திருத்தணியோ டெல்லி அமைச்சர் அவையில் இடம் பெற்றால்தான், நம்முடைய மாநிலத்து நெசவுத் தொழிலாளர்களுக்கு நிவாரணம் கிடைக்கும் என்று நினைக்க வேண்டியிருக்கிறது.

4-40 p.m. செஜட் பதிவில்லாத ஊழியர்களின் பிள்ளைகளுக்கு முழுச் சம்பளச் சலுகை கொடுக்க முன்வந்த கனம் நிதி அமைச்சரை மிகவும் பாராட்ட வேண்டும். எல்லா மாணவர்களுக்கும், சாதிமத பேதமில்லாமல்

7th March 1958] [Sri V. V. Ramaswami]

ஏழை என்ற ஒரே அடிப்படையில் வருமானத்தை வைத்து. இலவசக் கல்வி கொடுக்க உறுதி பூண்டிருப்பதாக நமது முதலமைச்சர் கூறியதாகக் கேள்விப்பட்டேன். அவரது முயற்சி வெற்றி பெறவேண்டு மென்று பெரிதும் விரும்புகிறேன். இந்த அடிப்படையில் வேலை செய்தால்தான், சாதி பேதம் ஒழியும் என்று அடிக்கடி யான் சொல்லி வந்திருப்பதை மீண்டும் வலியுறுத்துகிறேன்.

தமிழகத்தில் வான் நின்று உலகம் வாழ்ந்து வருவது இரண்டு பருவ காலம். அதாவது கோடையில் தென்மேற்கும், மாரியில் வடகிழக்கும். ஆனால் இப்பொழுது இன்னொரு பருவமும் சேர்ந்திருக்கிறது. அதாவது ஆண்டுதோறும் பட்ஜெட் கூட்டத்தோடு ‘ எலக்டிரிஸிடி கட் ’ என்ற பருவ காலமும் ஆரம்பித்துவிடுகிறது. இந்தக் காலத்தில்தான் மின்சாரம் தொழிலுக்கும் விவசாயத்திற்கும் மிக்க தேவை. இவைகள் மிகவும் பாதிக்கப் படுகின்றன. எல்லோராலும் ஆயில் என்ஜின்கள் வைத்துக்கொள்ள முடியாது. என் மின்சார போர்டார் ஈக்கிய நகரங்களில் முன்போல் ஆயில் என்ஜின்கள் வைத்து மின்ஆற்றலை உற்பத்தி செய்து ஈடு செய்ய முடியாதா ? அடுத்த ஆண்டில் சரியாகப் போகும் என்று நம்புகிறார்கள். மின்ஆற்றல் பெருகப் பெருக, மக்கள் தொகையும் பெருகுவதுடன், அவர்களுடைய ஆவலும். தேவையும் அதிகப்பட்டுக்கொண்டே போகின்றன. இந்தச் சங்கடத்தை நீக்குவதற்கு முன் எச்சரிக்கையாக நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று அமைச்சரவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

விவசாயத்தைப்பற்றியும் வரி விதிப்பதைப்பற்றியும் அனுபவமுள்ள பெரியவர்கள் பேசியிருக்கிறார்கள். இரும்பு பிடித்தவன் கை சும்மா இருக்காது என்று சொல்லுவார்கள். அதேபோல் நிதி அமைச்சர் யாராயினும் சரி, சும்மா இருக்கமாட்டார்கள் போலிருக்கிறது. விவசாயத்தில் ஈடுபட்டவர்களின் அனுபவத்தைக் கொண்டு சொல்லப்படும் கருத்துக்களை ஏற்றுக்கொண்டு, எவ்வளவு விலக்கு, சலுகை கொடுக்க முடியுமோ அவ்வளவும் கொடுக்க முன் வரவேண்டும். கணக்கு வைத்துத் தொழில் செய்தவர்களே திண்டாடும்பொழுது, விவசாயிகளையும் தொல்லைக்குள் கொண்டு மாட்டிவிடாதீர்கள்.

“ உழுவார் உலகத்தார்க்கு ஆணிஅஃ தாற்றாது
எழுவாரை எல்லாம் பொறுத்து ”

என்று வள்ளுவர் கூறியிருக்கிறார். வண்டியின் அச்சில் இருக்கிற ஆணியைக் கொஞ்சம் கழற்றி வைத்து விடுவார்கள் சிறுவர்கள். தெரியாமல் வண்டியை இழுத்தால் கொஞ்ச தூரம் போய் நிலை தவறிவிடும், இழுத்தவனுக்கும் துன்பம். ஆகவே, புதிய வரிகளைப் போடுவதாலும், கணக்குக் காட்ட வேண்டிய தொல்லைகளாலும், ஆணி கழன்றுவிடும்போலிருக்கிறது. ஆகவேதான் பெரியவர்கள் எச்சரித்திருக்கிறார்கள். பின்பும் புதிய வரியை என் போடவேண்டும் ?

சிறு சேமிப்புத் திட்டத்தில் ணம் வசூலிக்கச் செய்த ஏற்பாட்டால் அரசாங்க அதிகாரிகள் எவ்வளவ சங்கடப்பட்டார்கள், மக்கள் மனதிலே எவ்வளவு கசப்பு ஏற்பட்டிருக்கிறதென்பதும் அரசாங்கத்திற்குத் தெரிந்திருக்கலாம். மேலும் பதிய கடன் எழுப்பவும் திட்டமிட்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது. பின் இந்நிலையில் புதிய வரிகள் போடாமலிருந்தால் மக்களிடத்திலே ஒரு மன நிறைவு ஏற்பட்டிருக்கும், நல்ல சூழ்நிலையும் ஏற்பட்டிருக்கும்.

மேலும், மத்திய அரசாங்கத்திடமிருந்து பெற்றுள்ள கடன்களுக்குச் சிறிது குறைந்த வட்டி நிர்ணயம் செய்திருந்தால், நமக்கு ஒரு ஆண்டுக்கு 60 லட்சம் ரூபாய் வரை நிவாரணம் கிடைக்கும் என்று நிதி அமைச்சர் கூறியிருக்கிறார். அவர் புது வரி போடாமல் துண்டு விழும்படி செய்திருந்தால், மத்திய அரசாங்கத்து ன் வாதாட முடியும். அவர்களும் இணங்குவார்கள். என் இந்த முறை கையாளப்படவில்லை ? சென்ற ஆண்டில் ரூ. 3 கோடி 39 லட்சம் துண்டு விழுந்ததைச் சரிக்கட்டாமல் விட்டு வைத்திருந்தார்கள் ? அதே முறையை இந்த ஆண்டிலும் என் கையாண்டிருக்கக் கூடாது ? ‘ வருவாய் இன வரவு செலவைச் சரிகட்டுவதற்குப் போதிய நிதி வசதிகள் திரட்ட முடியம் என்று திட்டக் கமிஷனிடம் குறிப்பாக உறுதி கூறியுள்ளோம். ஆகவே, கீழ்க்கண்ட புது வரி

